# நூல் விவரம்


| | | |
|---|---|---|
| தலைப்பு | : | தேவேந்திர குல வேளாளர் வரலாறும் சமூக அரசியல் எழுச்சியும் |
| ஆசிரியர் | : | முனைவர் சி. பரமேஸ்வரி |
| வெளியீடு | : | அறிவகம், சி 1, ஆசிரியர் குடியிருப்பு<br>பாரதியார் பல்கலைக்கழகம்<br>கோவை - 641 046. |
| வெளியீட்டு எண் | : | 2 |
| மொழி | : | தமிழ் |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| பொருள் | : | சமூகப் பண்பாடு ஆய்வு |
| பதிப்பு | : | முதற் பதிப்பு |
| பதிப்பாண்டு | : | ஜூலை, 2000 |
| நூல் அளவு | : | 1/8 |
| அச்சு அளவு | : | 11 புள்ளிகள் |
| பக்கங்கள் | : | 84 |
| விலை | : | 20 ரூபாய் |
| அச்சகம் | : | **மாமன்னர் அச்சகம்**<br>10/2 A, நால்வர் நகர், மருதமலை ரோடு<br>பாரதியார் பல்கலைக்கழகம் அஞ்சல்,<br>கோயமுத்தூர் - 641 046. |

# பொருளடக்கம்

அணிந்துரை 4

வாழ்த்துரை 6

நன்றியுரை 7

1. தேவேந்திர குல வேளாளர் வரலாறு அறிமுகம் 8

2. குலப்பிரிவுகளும் கூட்டமுறைகளும் 39

3. சமூக அரசியல் எழுச்சி 67

பின்னிணைப்பு

1. தேவேந்திரர் தோற்றக்கதைகள் 80

# அணிந்துரை

டாக்டர் தே. ஞானசேகரன்
பேராசிரியர், தமிழ்த்துறை
பாரதியார் பல்கலைக்கழகம்
கோவை - 641 046.

தமிழில் சமூகவியல் வரலாறு (Social History of the Tamils) இன்னமும் சரியாக வளர்ச்சி பெறவில்லை என்று அறிஞர்கள் கருத்துத் தெரிவிக்கின்றனர். ஒரு நாட்டின் சமுதாயப் பண்பாட்டு வரலாறு முறையாக எழுதப்பட வேண்டுமானால் அந்நாட்டின் இலக்கியம், பண்பாடு, வரலாற்றுச் சான்றுகள், நாட்டுப்புற வழக்காறுகள் ஆகியவற்றையும் ஆராய்ந்து எழுதவேண்டும். அப்பொழுதுதான் ஒரு நாட்டின் வரலாறு மன்னர்களின் வரலாறாக இல்லாமல் மக்களின் வரலாறாக (Social History) அமையும். அவ்வகையில் தமிழில் முறையான பண்பாட்டு வரலாற்றை உருவாக்கத் துணை செய்யும் வகையில் தமிழகத்தில் வாழும் மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளர்களின் சமூக வரலாற்றையும், பண்பாட்டையும் தேடித் தொகுத்தளிக்கும் வகையில் இந்நூல் அமைந்துள்ளது.

தமிழகத்தில் சங்க காலத்திலும் இடைக்காலத்திலும் மள்ளர் என்று இலக்கியங்களிலும் வரலாறுகளிலும் குறிக்கப்படுபவர்களும் பிற்காலத்தில் மள்ளர், தேவேந்திர குல வேளாளர் என்று குறிக்கப்படுபவர்களும் ஒரே குலத்தவர்கள் ஆவர். இவர்கள் தமிழகத்தின் பூர்வீகக் குடிகளாவர். தமிழ் மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள் ஆவர். பண்டை நாளிலிருந்து வீரத்திற்கும் பெருமைக்கும் பேர் போனவர்கள் என்றும் மூவேந்தர் மரபினர் என்றும் வரலாற்றாசிரியர்களால் குறிக்கப்படுபவர்கள் இவர்கள் ஆவர். வேளாண்மையே இவர்களின் முதன்மைத் தொழில். "ஏரும் போரும் இணை பிரியாமல்" என்றவாறு பண்டை காலம் முதல் இன்றுவரை வேளாண்மைக்கும் வீரத்திற்கும் பெயர்பெற்று விளங்கும் வீரமரபினர் இந்த மள்ளர்கள் ஆவர். இவர்களின் பூர்வீக வரலாற்றை பல வரலாற்று இலக்கியச் சான்றுகளோடு இந்நூலின் முதல் இயல் பேசுகின்றது. மருதநில வேளாண் மரபினரான இந்த மள்ளர் மரபினர் எவ்வாறு பள்ளராய் வீழ்ச்சியுற்றனர் என்றும் நூலாசிரியர் நிறுவியுள்ளது பாராட்டுகுரியது ஆகும். பண்பாட்டு வரலாறு என்பதற்கேற்ப இம்மக்களிடம் வழக்கிலுள்ள பல நாட்டுப்புற வழக்காறுகளையும் இம்மக்களின் வரலாற்றை எழுத ஆசிரியர் பயன்படுத்தியுள்ளவிதம் சிறப்பாக அமைகின்றது. இந்த முதல் இயலில் ஆசிரியர் சொல்லியுள்ள பலமுடிவுகள் தமிழக வரலாற்றையே மாற்றி எழுதச் சொல்லும் மிக உயரிய உண்மைகள் அகும்.

மள்ளர், உழவர், கடையர், கடைசியர், ஆற்றுக்காலாட்டியர், களமர் என்று சங்க இலக்கியங்களில் குறிக்கப்படும் பல குலப்பெயர்கள் இன்றும் இம்மக்களின் குலப்பெயர்களாக வழங்கி வருவதை ஆசிரியர் ஆய்ந்து சொல்லியுள்ளார். ஆரியக் கடவுள் இந்திரனுக்கும் மருதநிலக் கடவுள் வேந்தனுக்கும் யாதொரு தொடர்புமில்லை. இந்த வேந்தனே, தேவேந்திரனாகி இன்று தேவேந்திர குல வேளாளரின் பெயர் தோன்றுவதற்குக் காரணமான மருதநிலத்தலைவன் மள்ளரின் மூதாதை என்ற கருத்தும் ஆசிரியரால் மிகக்கூர்ந்து ஆராயப்பட்டுள்ளது.

பல்வேறு கல்வெட்டுக்கள், செப்புப் பட்டயங்கள் இம்மக்களின் வரலாற்றை மிக மேன்மையுடையதாகவே சித்திரிக்கின்ற விதத்தையும் இந்நூலில் காணமுடிகின்றது. இந்தியச் சுதந்திரப் போராட்டத்தில் இம்மக்களின் பங்களிப்பு குறித்து ஆசிரியர் தேடித் தொகுத்தளித்துள்ள சான்றுகள் தமிழக வரலாற்றாசிரியர்கள் இதுவரை வேண்டுமென்றே புறக்கணித்த சான்றுகள் என்பதை இந்நூலைப் படிப்போர் உணர்வர்.

இரண்டாவது இயல் இம்மக்களின் குலப்பிரிவுகளையும் கூட்ட முறைகளையும் ஆராய்ந்து சொல்லியுள்ள இயல் ஆகும். இம்மக்களின் பெரும்பாலான கூட்டப்பிரிவுகள் குலதெய்வங்களின் அடிப்படையிலேயே காணப்படுவதையும் பெரும்பாலான குலப்பட்டங்கள் வேளாண் மரபுடனும் வீரமரபுடனும் தொடர்புடையதாகக் காணப்படுவதையும் இந்நூல் விரித்துப் பேசுகின்றது. இந்தக் குலப்பிரிவுகள் குறித்த ஆய்வு இன்னமும் நிறைய நிகழ்த்தப்பட வேண்டுமென்பதை இந்த நூல் எடுத்துச் சொல்லியுள்ளது.

மூன்றாவது இயலில் இன்று இம்மக்கள் சமூகரீதியிலும் அரசியல் ரீதியிலும் எழுச்சி பெற்றுவரும் நிகழ்காலச் சமூக வரலாறு எழுச்சியுடன் சொல்லப்பட்டுள்ளது. இந்நூல் சரியான நேரத்தில் சரியான முடிவுகளுடன் வெளிவருவதை நான் வாழ்த்தி வரவேற்கின்றேன். இந்நூலை தமிழ் கூறும் நல்லுலகம் ஏற்றுப் போற்றும் என்றும் நம்புகின்றேன். இந்நூலின் ஆசிரியர் டாக்டர் சி. பரமேஸ்வரி இதுபோன்ற பல நூல்களை எழுதி வெளியிட வாழ்த்துகின்றேன்.

(தே. ஞானசேகரன்)

# வாழ்த்துரை

**டாக்டர் க. கிருஷ்ணசாமி** MD, MLA
நிறுவனர்-தலைவர், புதிய தமிழகம்

இந்தியச் சமுதாயம் சாதிய - இயங்கா - தேக்கச் சமுதாயம், ஆரிய வாழ்முறை வேதங்கள், இந்து என்று கூர்தலறம் பெற்ற சமுதாய வாழ்வில் சாதிய வாழ்முறை, சாதிய விழுமங்கள், சாதிய ஆதிக்கம் இதற்கிடையே இந்திய ஒருமைப்பாடு என்றெல்லாம் பேசப்படுகிறது. உழைக்கும் மக்கள் குலப்பிரிவுகளின் மூடப்பட்ட வடிவங்கள் சாதிகளாகி விட்டன. வெள்ளையர் காலச்சூழலில் சாதிக்கட்டுமானம் உடையத்தக்கன என கருதப்பட்டது. விடுதலைபெற்ற இந்தியாவில் சாதியக்கட்டுமானம் வலுப்பெற்று எளிதில் உடையத்தக்கதல்ல என்பது உறுதியாகிவிட்டது. சாதிமுறை ஓரளவு வலுவிழக்கத் தொடங்கினாலும், முழுவதுமாக உடையவில்லை.

சாதிய அமைப்பில் உழைக்கும் மள்ளர் போன்ற குலங்களின் அடையாளங்கள் மறைக்கப்படுகின்றன. மள்ளர்கள் எனப்படும் தேவேந்திரகுல வேளாளர்களின் அடையாளங்கள் மீட்கப்பட்டு, மீட்டுருவாக்கம் செய்யப்பட்டு அவர்தம் புகழ்பூத்த வரலாறு உலகுக்குக் காட்டப்படுதல் வேண்டும். **தேவேந்திர குல வேளாளர் வரலாறும் சமூக அறிசியல் எழுச்சியும்** எனும் இந்நூல் பாராட்டத்தக்கது. இம்முயற்சியில் வெற்றி கண்டுள்ள முனைவர் சி. பரமேஸ்வர்யைப் பாராட்டுகின்றேன். இப்பணி மேலும் தொடர்வதாக. சாதிகள் பற்றிய அண்ணல் அம்பேத்கரின் கருதுகோள்கள் ஆய்வில் கருதப்படல் நலம்.

கோயமுத்தூர்
12.6.2000

(க. கிருஷ்ணசாமி)

# நன்றியுரை

"தேவேந்திர குல வேளாளர் வரலாறும் சமூக அரசியல் எழுச்சியும்" எனும் இந்நூல் "தேவேந்திர குல வேளாளர் சமூக வரலாறும் பண்பாடும்' என்ற எனது டாக்டர்பட்ட ஆய்வின் ஒரு பகுதியாகும். இந்நூலில் சங்ககாலம் முதல் இக்காலம்வரை குறிக்கப்படும் மள்ளர் குல வரலாற்றைச் சுருக்கமாக அறிமுகம் செய்ய முயன்றுள்ளேன். மேலும் இம்மக்களின் குலப் பிரிவுகளையும் கூட்டமுறைகளையும் தொகுத்துத்தந்துள்ளேன். இத்துடன் இம்மக்கள் இன்று சமூக ரீதியிலும் அரசியல் ரீதியிலும் எழுச்சி பெற்றுள்ள விதத்தை சான்றுகளுடன் சொல்லியுள்ளேன். இந்நூல் தமிழக வரலாற்றில் குறிப்பாகச் சமூக வரலாற்றில் (Social Hisotry) என் சிறிய பங்களிப்பாகும். இந்நூலினை தமிழ் கூறும் நல்லுலகம் ஏற்றுக் கொள்ளுமென்று நம்புகின்றேன்.

இந்நூலுக்கு சிறந்ததொரு அணிந்துரை வழங்கியுள்ள மள்ளரிய அறிஞர் டாக்டர் தே. ஞானசேகரன் அவர்களுக்கு என் நன்றிகள் என்றும் உரியது. இவரின் வழிகாட்டுதலில்தான் இந்நூல் உருவானது என்பதை நான் மகிழ்வுடன் நினைவு கூர்கின்றேன்.

இந்நூலுக்கு சிறந்ததொரு வாழ்த்துரை வழங்கி என்னை ஊக்கப்படுத்தியுள்ள தமிழகத்தின் எழுச்சிமிக்க அரசியல் எழுஞாயிறு புதியதமிழகத்தின் தலைவர் டாக்டர் க. கிருஷ்ணசாமி அவர்களுக்கு என் நன்றிகள்.

நான் ஆய்வு மாணவராகப் பணியாற்றுகையில் என் ஆய்வு வளர்ச்சியில் அக்கறைகாட்டி ஊக்கப்படுத்திய பாரதியார் பல்கலைக்கழக முன்னாள், தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் சிற்பி பாலசுப்பிரமணியம் அவர்களுக்கும் இன்னாள் தலைவர் டாக்டர் இரா. சந்திரசேகரன் அவர்களுக்கும் என் நன்றிகள்.

இந்நூலினை வெளியிடக் காரணமாக இருந்தவர் தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றத்தின் தலைவர், டாக்டர் குருசாமி சித்தர் அவர்கள் ஆவார். அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றிகள்.

இந்நூலினை வெளியிட பெரும் முயற்சி எடுத்துக் கொண்ட என் வாழ்க்கைத் துணை நலம் டாக்டர் தே. செயபாலன் அவர்களுக்கு என் நன்றிகள் என்றும் உரியது ஆகும்.

என் வாழ்க்கை வெற்றிகளின் பலநிலைகளில் துணைநிற்கும் என் தந்தை க. சின்னச்சாமி, ஆசிரியர், தாய் சாத்தம்மாள் ஆசிரியை ஆகியோர் வணங்குதலுக்கு உரியவர்கள். அவர்களை வணங்கி மகிழ்வதில் பெருமிதம் அடைகின்றேன்.

இந்நூலினை அழகிய முறையில் அச்சிட்டு உதவியுள்ள மாமன்னர் அச்சக உரிமையாளர்கள் மா. சிவக்குமார், மா. இராஜ்குமார் அவர்களுக்கு என் நன்றிகள் பல.

சி. பரமேஸ்வரி

# இயல் - 1

# தேவேந்திர குல வேளாளர் வரலாறு அறிமுகம்

சங்க காலத்தில் மள்ளர் என்றும் இக்காலத்தில் பள்ளர் - தேவேந்திர குல வேளாளர் என்றும் அறியப்படும் இம் மக்கள் மண்ணின் மூத்த குடிமக்களாவர். மருத நில வேளாண்மை வாழ்க்கையைக் கொண்டுள்ள இம் மக்களின் முதன்மைத் தொழில் வேளாண்மையே ஆகும். தமிழ் இவர்களின் தாய்மொழி ஆகும். இவ்வியல் பண்டைத் தமிழகத்தில் நிலவிய சாதி அமைப்புக் குறித்தும் தமிழ் இலக்கியத்தில் குறிக்கப்படும் மள்ளர் மரபு குறித்தும் மருதநிலத்திற்கும் மள்ளருக்கும் உரிய தொடர்பு குறித்தும் மள்ளர் மரபினராய் இருந்த இம்மக்கள் பள்ளராய் வீழ்ச்சியுற்ற விதம் குறித்தும் வேந்தன் எனும் தேவேந்திர குல வேளாளர் எனும் பெயர் இவர்களுக்கு அமைந்தது குறித்தும் சிறப்பாக விளக்க முயல்கின்றது. மேலும் நாட்டுப்புற வழக்காறுகளில் இம்மக்களின் வரலாறுகள் தேங்கிக் கிடப்பதையும், வரலாற்றுச் சான்றுகளில் இம்மக்கள் குறித்த வரலாறுகளையும், சுதந்திரப் போராட்டத்தில் இம்மக்களின் பங்களிப்பும் கண்டறிந்து சொல்லப்பட்டுள்ளன.

## பண்டைத் தமிழகத்தில் சாதி அமைப்பு

"பொருளாதாரத்தில் தாழ்ந்தவர்கள் சமுதாய அந்தஸ்த்திலும் தாழ்ந்த சாதியாகின்றனர் என்றும் குலக்குழுக்குள்ளே இருந்த தொழிற்பாகுபாடுகளே தனித்தனிச் சாதிகளாக மாறியுள்ளன என்றும் டி.டி. கோசாம்பு குறிப்பிடுவார். "சாதித் தோற்றம்" குறித்து சொல்லும் அறிஞர்கள் தமிழகத்தில் ஆரியர்களின் வருகைக்குப் பின்னரே சாதி தோன்றியது என்று சொல்லுவர் ஆனால் ஆரியர் தமிழகத்தினுள் வரும் முன்னமே தமிழகத்தின் நாகரீகம் தனிச்சிறப்புடன் இருந்தது என்று பல அறிஞர்கள் ஒத்துக் கொள்கின்றனர். இதன்படி பார்த்தால் ஆரியர்களிடம் நிலவிய வர்ண அமைப்போ சாதிய அமைப்போ தமிழகத்தில் இருந்திருக்க வாய்ப்பில்லை. ஆனால் தமிழகத்தில் அன்று வாழ்ந்த ஒவ்வொரு இனக் குழுவும் ஏதேனும் ஒரு தொழிலில் திறமை பெற்றவர்களாக விளங்கியிருந்தனர்[1]. காட்டாக வேட்டை, கால்நடை வளர்ப்பு, வேளாண்மை, வாணிபம் என்றவாறு அன்றைய தொழில்கள் அமைந்திருந்தன. இவ்வாறான தொழிற்பாகுபாடுகள் ஆரியர்களின் தமிழக வருகைக்குப் பின்னர் வர்ணம் மற்றும் சாதியச் சிந்தனையோடு பொருத்திக் காட்டப்பட்டன. நால் வருணப் பாகுபாடு அன்றைய தமிழக வாழ்க்கை முறைக்குப் பொருந்தாது.

"மக்களைச் சாதியடிப்படையில் வேறுபடுத்திக் காண்பது இந்தியப் பண்பாட்டின் கூறாகும். ஆரியர்களின் வருண முறை பிறவி பற்றியது. தமிழகத்தில் சாதிப் பிரிவு அவரவர் மேற்கொண்ட தொழில் பற்றியது ஆகும். சங்க காலத்திலேயே தொழில் பற்றிய பிரிவு, பிறவி பற்றியதாக மாறத் தொடங்கியது. காலம் செல்லச் செல்ல இஃது இறுக்கம் கொள்வதாயிற்று. பல்லவர், சோழர், நாயக்கர் போன்ற அரச மரபினர் வருணாசிரமத்தைப் போற்றலாயினர். ஒவ்வொரு சாதியினுள்ளும் உட்பிரிவுகள் தோன்றின. சாதிப் பூசல்களும் தோன்றின [2]." பெரும்பாலான அறிஞர்களின் கருத்துக்களும் இதுவே ஆகும். இதிலிருந்து தமிழர் சமுதாயப் பிரிவு தொழில் பற்றியது என்பது தெளிவு இவ்வாறான தொழிற்பிரிவுகள் பண்டையத் தமிழகத்தில் எப்படி இருந்தது என்பதைச் சங்க கால இலக்கியங்களும், முதல் இலக்கண நூலான தொல்காப்பியமும் நமக்குக் காட்டத் தவறவில்லை.

## தொல்காப்பியமும் சாதி பற்றிய கருத்துக்களும்

சாதி என்பது தமிழ்ச் சொல் அன்று. ஜாதி என்ற வடமொழிச் சொல்லே சாதி என்று தமிழில் வழங்குகின்றது. இந்தச் சாதி என்ற சொல்லும் மக்களைக் குறிக்கும் சொல்லாகப் பண்டைக் காலத்தில் வழங்கவில்லை. தொல்காப்பியத்தில் சாதி என்ற சொல் வழங்குகின்றது. ஆனால் அது மக்களைச் சுட்டவில்லை.

"நீர் வாழ் சாதியும் அது பெறற்கு உரிய"
"நீர் வாழ் சாதியுள் நந்தும் ஒன்று"

என்பன தொல்காப்பியம் மரபியல் சூத்திரங்கள் இச்சூத்திரங்களில் சாதி என்னும் சொல் தண்ணீரில் வாழும் உயிர்களையே குறித்தன. இச் சொல் பிற்காலத்தில்தான் மக்களைக் குறித்து வழங்கிற்று என்பார் சாமி சிதம்பரனார் [3]. சங்க இலக்கியம் முதல் சிலப்பதிகாரக் காலம் வரை சாதி என்ற சொல் மக்களைக் குறிக்கவில்லை. சிலப்பதிகாரத்தில் இடம் பெறும் சாதி என்ற சொல் மக்களைக் குறிக்கவில்லை. மாறாக மாணிக்க வருக்கங்களை உணர்த்தவே "சாதி என்ற சொல்" கையாளப்பட்டுள்ளது. சிலப்பதிகாரத்தில் சாதியை குலம் அல்லது குடி என்ற சொல்லால் அழைத்து வந்தனர் [4].

தொல்காப்பியர் தம் மரபியலில் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் எனும் நால்வகைப் பகுப்புக்களைப் பற்றி 71 முதல் 85 வரையிலான நூற்பாக்களிற் கூறுகின்றார். ஆனால் இந்நூற்பாக்கள் பிற்காலத்து ஒருவரால் இடைச் செருகலாகச் சேர்க்கப்பட்டனவாக இருக்கலாம் என்று அறிஞர் சிலர் கூறுவர் [5].

இவை இப்படி இருப்பினும் சங்க காலத்தில் இருந்த அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் எனும் நாற்பெரும் பிரிவினர் வடவரின் வருணமுறையோடு ஒப்பிட்டுப் பேசப்பட்டனர். இவர்களுடன் சமூகத்தில் சிறப்புடையவர்களாகப் பல்வேறு தொழில் பிரிவினர் இருந்துள்ளனர். குறிஞ்சி நிலத்தவர் குறவர் என்றும், முல்லை நிலத்தவர் ஆயர் என்றும் மருத நிலத்தவர் உழவர் (மள்ளர்) என்றும், நெய்தல் நிலத்தவர் பரதவர் என்றும், பாலை நிலத்தவர் எயினர் என்றும் பெயர் பெற்றனர். இவர்கள் தவிர தச்சர், கொல்லர், குயவர், வண்ணார், நெசவாளர், உமணர், பறையர், பாணர், துடியர், கடம்பர், வேட்டுவர், கணியர், பரத்தையர் முதலானவரும் வாழ்ந்துள்ளனர். இவர்கள் தவிர பிற மாந்தர் என்ற வகையில் மழவர், மல்லர், மறவர் என்றழைக்கப்படும் மக்கள் போர் வீரர்களாக இருந்து மன்னர்களுக்கு உதவி புரிந்துள்ளனர் [6].

பண்டை நூலில் பள்ளர், பள்ளியர் என்னும் வகுப்பார் மள்ளர், மழவர், உழவர், காராளர், கருங்களமர் என்னும் குலப் பெயர்களுடன் இழிவின்றி குறிக்கப்படுவதாக தேவநேயப் பாவணர் குறிப்பிடுவார் [7].

இவ்வாறான கருத்துக்களிலிருந்து அக்கால மக்கள் அவரவர் செய்த தொழிலால் அறியப்பட்டனர் பிறவியால் அல்ல என்று கருதலாம். இவ்வாறு பரம்பரையாக ஒரே தொழிலைச் செய்து வந்தவர்களிடையே பல குலப்பிரிவுகள் தோன்றின. இக்குலப் பிரிவுகளின் இறுக்கமே பின்பு சாதிகளாக உருவாகியிருக்க வேண்டும்.

### மள்ளர் மரபும் தமிழ் இலக்கியமும்

"சங்க காலத்திற்கு முன்பு இருந்தே தமிழகத்தில் காடு கெடுத்து நாடாக்கி மருதநிலத்தில் நாகரீகத்தையும் அரசையும் தோற்றுவித்தவர்கள் மள்ளர் எனும் தேவேந்திரர் ஆவர். மருத நிலத்தில் வாழ்ந்த மக்கள் மள்ளர், உழவர், கடையர், களமர், கடைசியர், ஆற்றுக்காலாட்டியர் என்று அழைக்கப்பட்டதைச் சங்க இலக்கியங்கள் காட்டும் 14ஆம் நூற்றாண்டு வரை அதாவது மூவேந்தர் ஆட்சி தமிழகத்தில் பின்னடையத் தொடங்கும் வரை தேவேந்திரர்கள் மள்ளர் என்றே இலக்கியத்திலும் வரலாற்றிலும் குறிக்கப்படுகின்றனர் [8]. மள்ளர்தான் பிற்காலத்தில் பள்ளர் என்றும் தேவேந்திரர் என்றும் அழைக்கப்பட்டனர் என்பதற்குப் பள்ளு நூல்களே சிறந்த சான்றாகும். இப் பள்ளு நூல்களில் மள்ளர், பள்ளர், தேவேந்திரர் என்றவாறு மூன்று சொற்களும் திரும்பத் திரும்ப பயன்படுத்தப்படுவதைப் பார்க்க முடியும். இங்கு மள்ளர் என்பது ஒரு குலம் சாதி என்றே குறிக்கப்படுவதைக் காணலாம்.

"மள்ளர்கள் எல்லோரும் ஏர் பூட்டி"
(வையாபுரிப் பள்ளு பா - 172)

"மள்ளர்கள் பள்ளியருடனே கூடி வந்து"
(செங்கோட்டுப் பள்ளு பா - 197)

"பண்ணை மள்ளச் சாதிக் குடும்பன்"
(பொய்கைப் பள்ளு பா - 25)

"தெய்வேந்திரப் பள்ளனும் நானே"
(கட்டிமகிபன் பள்ளு பா - 13,17)

"தேவேந்திரப் பள்ளனும் நான்"
(செங்கோட்டுப் பள்ள பா - 8)

இக்காட்டுக்களிலிருந்து மள்ளர்தான் பள்ளர் என்று குறிக்கப்படுகின்றனர் என்று அறியலாம். இதனை உள்வாங்கிக் கொண்டு தமிழிலக்கியங்களில் காலவரிசைப்படி பின்னோக்கிச் சென்றால் அங்கு மள்ளர் என்று குறிக்கப்படும் மக்களை மருதநில உழவர்களாகக் காணமுடியும்.

"குன்றுடைக் குலமள்ளர் குழு உக்குரல்"
(கம்பராமாயணம் பாலகாண்டம் நாட்டுப் படலம், பா - 32)

இப்பாடலில் மள்ளர் என்போர் ஓர் குலம்/இனம் என்றே கம்பர் குறிப்பிடுவதைக் காண்கின்றோம்.

**தேம்பாவணி**

"களித்த மள்ளர்கள் தூண்டும் ஏற்று இனம்"
(தேம்பாவணி நாட்டுப்படலம், பா - 32)

இங்கே மருத நில உழவர்கள் மள்ளர் என்று குறிக்கப்படுவதைக் காண்கின்றோம்.

**பேரூர்ப்புராணம்**

"வருத்தியவேனில் வடுபுனற்கெதிரு மள்ளரின்
மனமகிழ்ந்தடுத்த"
(திருநகரப் படலம், பா - 68)

இங்கும் மள்ளர் உழவர் என்று குறிக்கப்படுவதைக் காண்கின்றோம்.

**புறநானூறு**

"............... ஆர்நார்ச்
செறியத் தொடுத்த கண்ணிக்
கவிதை மள்ளன் கைபட்டோரே"

(புறநானூறு - 81)

இங்கு சோழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளியின் வீரம் குறித்து வரும் போது மள்ளர் என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளதைக் காண்கின்றோம். இவ்வாறே தமிழ் இலக்கியங்களில் 120 நூல்களுக்கு மேல் ஆதாரங்காட்டி மள்ளர்தான் இன்றைய பள்ளர் இவரே மூவேந்தர் மரபினர் என்றவாறு டாக்டர் குருசாமி சித்தர் நிறுவுவார்[9]. இக்கருத்து ஏற்புடையதே ஆகும். மள்ளர் என்பது ஒரு குடி, ஓர்இனம், ஒரு குலம் என்ற கருத்து உறுதிப்படும் நிலையில் இன்றைய பள்ளர் இனத்தின் பண்பாட்டு வேர் (Cultural Root) மூவேந்தர் வரலாற்றோடு தொடர்புடையதாகவே விளங்குகின்றது.

**மள்ளர் - பள்ளர்**

மள்ளர் தான் இன்றைய பள்ளர் ஆவர் என்று குறிப்பிடும் அறிஞர்கள் கருத்துக்கள்.

**வரலாற்றறிஞர் கே.ஆர். அனுமந்தன்**

"சங்க இலக்கியத்தில் வரும் வீர இனத்திற்குப் பேர் போன மள்ளர் பள்ளரின் முதாதையர் ஆவர்[10] (The ancient heroice tribe called Mallar described in the sangam classic were probably the ancestors Pallars).

**டாக்டர் ஜி.ஒப்பர்ட்**

மள்ளர் பள்ளர் ஆனது உச்சரிப்பு வேறுபாடே ஆகும் என்பார்[11].

**ட.கே. வேலுப்பிள்ளை**

பழந்தமிழ் இலக்கியத்தில் வரும் மள்ளர் பிற்காலத்தில் பள்ளர் என வழங்கலாயினர்[12].

### எம்.சீனிவாச அய்யங்கார்

பள்ளர் அல்லது மள்ளர் பாண்டிய படை மறவர் ஆவர் என்று குறிப்பிடும் இவர் மேலும் பண்டைத் தமிழகத்தில் பள்ளர் என்ற வகுப்பு இல்லை. அவருக்குப் பதில் மள்ளர் என்ற வகுப்பு இருந்தது. இவர் விவசாயத் தொழிலாளராகவும் படை மறவராகவும் இருந்தனர் என்பார் [13].

### மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர்

பள்ளர் என்பது மள்ளர். மருத நிலத்தில் வாழும் உழவர். பாலைநிலத்து மறவர் படைஞராகுமுன் மருத நிலத்து உழவரே போர்த் தொழில் செய்து வந்தனர். அதன் பின்பும் உழவர் போர்த் தொழிலை விட்டு விடவில்லை என்பார் [14].

### ஒப்பியல் அறிஞர் மேஜர் முனைவர் கதிர்மகாதேவன்

சங்க இலக்கியத்தில் வீரம் என்ற சொல் இல்லை. இது சமஸ்கிருதச் சொல். ஆனால் மள்ளர் எனும் சொல் இருக்கின்றது. புறநானூற்றில் மன்னர்க்கும் மள்ளர் என்று பெயர். மக்களுக்கும் மள்ளர் என்று பெயர். அந்த மள்ளர்கள் ஏர்க்களத்தில் உழவராகவும் போர்க்களத்தில் வீரராகவும் வாழ்ந்தனர் என்பார் [15].

### மொழியியல் அறிஞர் முனைவர் சி.சிவசண்முகம்

தமிழ் மொழியில் ஒலியியல் அடிப்படையில் மகரம் பகரமாகும் என்பதற்கேற்ப மள்ளர் எனும் சொல் பள்ளர் என்றும் மாறியிருக்கலாம் என்பார் [16].

### வரலாற்று அறிஞர் தேவ ஆசீர்வாதம்

மூவேந்தர் யார்?, வேளாளர் யார்?, பள்ளர் அல்ல மல்லர் ஆம் மன்னர் என்றவாறு இவர் எழுதியுள்ள மூன்று நூல்களில் இலக்கியம், வரலாறு, கல்வெட்டு, குடிக்கணக்கெடுப்பு, இன்றைய மள்ளரின மக்களின் பண்பாடுகளை ஆதாரமாக்கி மள்ளர் தான் பள்ளர் என்று முடிவு செய்கின்றார் [18].

### தமிழறிஞர் முனைவர் குருசாமிசித்தர்

தமிழ் இலக்கியங்களில் மள்ளர் என்று குறிக்கப்படுபவர்களே இன்று பள்ளர் என்றும் தேவேந்திர குல வேளாளர் என்றும் குறிக்கப்படுபவர்கள் ஆவர் என்று தனது தமிழ் இலக்கியத்தில் பள்ளர் (மள்ளர்) எனும் நூலில் நிறுவியுள்ளார் [17].

மேற்கண்ட அறிஞர்களின் கருத்துக்களிலிருந்து சங்க இலக்கியங்களில் குறிக்கப்படும் மள்ளர் இனமே இன்று பள்ளர் என்று குறிக்கப்படுவதாக முடிவுக்கு வரலாம். இக்கருத்தை வலியுறுத்துவதாகவே நிகண்டுகளின் கருத்துக்களும் அமைகின்றன.

**திவாகர நிகண்டு**

> "அருந்திறல் வீரர்க்கும் பெருந்திறல் உழவர்க்கும்
> வருந் தகைத்தாகும் மள்ளர் எனும் பெயர்.

**பிங்கல நிகண்டு**

> "செருமலை வீரரும் திண்ணியோரும்
> மருதநில மாக்களும் மள்ளர் என்ப"

என்றவாறு நிகண்டுகள் மள்ளரைப் போர் வீரராகவும் மருத நில மக்களாகவும் உழவராகவும் குறிப்பிடும்.

**மருதநிலமும் மள்ளரும்**

மள்ளர் என்போரை வீரராக, உழவராகக் காட்டும் சங்க இலக்கியம் மருத நில வாழ்க்கையை உழவர் வாழ்க்கையாகக் காட்டத் தவறவில்லை. சங்க இலக்கியத்தில் குறிக்கப்படும் மருத நில மக்கள் ஏனையோரினும் நாகரீகத்தில் மேம்பட்டவர் ஆவர். இங்கு வாழ்ந்த குடிமக்கள் மள்ளர், உழவர், உழத்தியர், கடைசியர், கடையர் ஆற்றுக் காலாட்டியர் என்று குறிக்கப்படுகின்றனர். இன்று தேவேந்திரர் என்று அறியப்படும் இம்மக்களின் தொழில் வேளாண்மை ஆகும். வேறு தொழில்கள் இவருக்கு இல்லை. இவர்களின் மேற்சொன்ன மருத நில வாழ்க்கையும், இவர்கள் இன்றும் தங்களின் கடவுள் தேவேந்திரன் (வேந்தன்) என்று வணங்கி வருவதும் இவர்கள் சங்க கால மருத நில மக்களின் வழித் தோன்றல்கள் என்பதை வலியுறுத்தும் [19].

சங்க காலத்தில் மழவர், மல்லர், மள்ளர் என்று அழைக்கப்படும் மக்கள் போர் வீரர்களாக இருந்து மன்னர்களுக்கு உதவி புரிந்துள்ளனர் [20]. மல்லர் என்பது மன்னரைச் சுட்டும் பெயராகவும் உள்ளது. மல்லர் பேரூர் பெருமான் என்பது மன்னன் இளந்திரையனைக் குறிக்கும் அல்லது போர் வீரர்கள் நிறைந்த ஊர் என்பதைக் குறிக்கும். சேர, சோழ, பாண்டிய மன்னர்களுக்கு பெருமாள், மல்லன் என்ற பெயர்கள் வழங்கியதாகவும், வயல்களில் இம்மக்கள் (பள்ளர்) வைத்து வழிபடும் தெய்வத்தின் பெயரும் மல்லன் என்று பெயர் பெறுகின்றது என்பார் [21]. ஜி.ஒப்பர்ட். மேற்கண்ட கருத்துக்கள் மல்லர் - மள்ளர் என்ற இனம் போர் வீரராகவும் மன்னராகவும் விளங்கியிருப்பது பெறப்படும். காரணம்

மருதநிலத்தில்தான் அரசுகள் தோன்றியது என்பது உலக வரலாறு குறிப்பிடும் உண்மை.

### மல்லன் வழிபாடும் தேவேந்திரர்களின் வீரமரபும்

ஜி.ஒப்பர்ட் குறிப்பிடும் மல்லன் வழிபாடு தேவேந்திர குலத்தாருக்கே உரியதாகும். இம்மக்கள் வயல்களில் வைத்து வழிபடும் தெய்வம் மல்லாண்டை என்று கோவைப் பகுதியிலும் மல்லன் கோயில் என்று தென் தமிழகத்திலும் வழக்கிலிருப்பதைக் காணமுடிகின்றது. இத்தெய்வ வழிபாடு இவர்களிடம் மட்டுமே காணப்படுவதாக கோவை தொல் பொருள்த் துறை அறிஞர் டாக்டர் மகேஸ்வரன் குறிப்பிடும் கருத்தும் பள்ளு இலக்கியங்களில் மல்லாண்டை வழிபாடு இடம் பெறுவதும் இதே ஆய்வேட்டில் வேளாண் பண்பாடு எனும் இயலில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது. தமிழகத்தில் தேவேந்திரர்கள் வாழும் குடியிருப்புக்களில் பெரும்பாலும் மல்லன் கோயில்கள் காணப்படுகின்றன. "மல்லன் கோயில்கள் பெரும்பாலும் திருச்சி மாவட்டத்தில் பள்ளர் குடியிருப்புக்களில் பெரும்பாலும் வழிபடப்பட்டு வருகின்றன"[22]. மேலும் இம்மக்களின் பெயர்களில் மல்லன், பெரியமல்லன், சின்னமல்லன், மல்லயசாமி, மல்லாண்டன், மல்லையம்மாள், பெருமாள் (மள்ளர்) என்ற பெயர்களும் இம்மக்கள் வாழும் ஊர்கள் மள்ளப்புரம் மள்ளக் கோயில்பட்டி என்றும் இருப்பதைக் காணமுடிகின்றது.

இம்மக்கள் அன்றும் இன்றும் வீரமிக்கவர்களாகவும் பிறருக்கு அடங்கி அஞ்சி வாழாதவர்களாகவே விளங்குகின்றனர். இம்மக்கள் மேல் நிகழ்த்தப்பட்ட பல சாதியக் கலவரங்களுக்கும் ஒடுக்கு முறைக்கும் இவர்கள் எதிர்த்து நின்று வீரம் காட்டியே வந்துள்ளனர். "இன்று தமிழகத்தில் தென் மாவட்டங்களில் நடைபெறும் சாதிக் கலவரங்கள் மள்ளர் - மறவர் மோதல்களாகவே நடந்து வருவதைக் காணமுடிகின்றன. காட்டாக 1957 முதுகுளத்தூர் கலவரம் தொடங்கி போடி (1989) கொடியன்குளம் (1996) நெல்லை, இராஜபாளையம் (1997) இராமநாதபுரம் (1998) என்று தொடரும் கலவரங்கள் இவர்களைக் காரணமின்றி அடக்கியாள நினைப்பவர்களுக்கு இவர்களின் அடங்கிப் போகாத வீர மனோபாவமே (Fortitude) ஆகும்[23]. இவர்களின் துணிச்சலான வீரமரபு கருதியே "பள்ளனையும் இரும்பையும் பதம் பார்த்து அடிக்கனும்" "கள்ளனை விட்டுப் பள்ளனை அடி, பள்ளனை விட்டு கள்ளனை அடி" என்றவாறான வழக்காறுகள் வழங்கி வருகின்றன. இவர்களின் குடியிருப்புக்களில் இன்றும் சிலம்பம், வாள்பயிற்சி போன்ற வீரவிளையாட்டுப் பள்ளிகள் காணப்படுவதும் இவர்களின் வீரமரபை உறுதிப்படுத்தும்.

**வேந்தன் எனும் தேவேந்திர குல வேளாளர் பெயர்க்காரணம்**

"சங்க காலத்தில் சிறு சிறு குலங்களாகவும், குடிகளாகவும் குலங்களின் இணைப்புக்களாகவும், சிதறிக் கிடந்த தமிழகத்து மக்கள் ஓயாத போரில் ஈடுபட்டிருந்தனர். ஓயாத போர், படையெடுப்பு, ஊர் அழிவு, அரசுரிமைச் சண்டை ஆகியவற்றின் அடிப்படையிலேயே சங்க காலத் தமிழகத்திலே மெல்ல மெல்ல அரசுகள் தோன்றலாயின. சங்க காலத்தில் அரசு செலுத்திய பேரரசரும் தொடக்கத்தில் சிறுகூட்டத்தினருக்குத் தலைவராக இருந்திருத்தல் வேண்டும். சங்க காலத்தின் நடுப்பகுதியில் அவர் அரசரான நிலையை அடைந்தனரென அக்கால நூல்கள் வாயிலாக அறிகின்றோம். ஈற்றில் பொருளாதாரத்திலும் மக்கள் தொகையிலும் சிறந்த உழவர் (மருதநிலத்) தலைவனே தமிழ் நாட்டு அரசியலில் வலிமை சிறந்து விளங்கினான். இந்தச் சூழலில் தான் வடமொழியாளர்களின் ஆதிக்கம் தமிழகத்தில் தோன்றியது" என்பார் கலாநிதி க. கைலாசபதி [24]. இக்கருத்தின்படி வடமொழியாளர்களின் செல்வாக்கு தமிழகத்தில் ஏற்படும் முன்னரே மருதநில உழவர் குடியினர் அரசியலில் வலிமை பெற்று விளங்கினர் என்பதும் மருதநிலத் தலைவன் வேந்தன் (தேவேந்திரன்) என்று சுட்டப்பட்டான் என்பதையும் மனதில் கொள்ள வேண்டும். இங்கு தொல்காப்பியம் வயலும் வயல் சார்ந்த நிலத்தின் கடவுளை "வேந்தன் மேய தீம்புனல் உலகம்" என்று குறிப்பிடுவதையும் கருத வேண்டும். தொல்காப்பியரின் கருத்துப்படி மருதநிலக் கடவுள் வேந்தன் என்றே குறிக்கப்படுகின்றான். ஆனால் உரையாசிரியர்கள் வேந்தனை இந்திரன் என்று குறிப்பிடுவதற்குக் காரணமாக மறைமலையடிகள் வருமாறு குறிப்பிடுவார்.

"ஆரியர்களின் மழைக்கடவுள் இந்திரன் என்ற பெயரில் அழைக்கப்பட்டான் அதனால் ஆரியத் தொடர்பு தமிழகத்தில் ஏற்பட்ட போது, மருத நில மக்கள் மழை வேண்டி வணங்கிய தமிழ்க் கடவுள் வேந்தனும் இந்திரன் என்று அழைக்கப்படும் மரபு ஏற்பட்டது" என்பார் [25]. இக்கருத்து ஏற்புடையதே ஆகும். இதிலிருந்து மருத நில மக்கள் வணங்கிய கடவுள் அவர்களது முன்னோரான வேந்தனே ஆகும். காரணம் தமிழர்களின் கடவுள் கோட்பாடு முன்னோரை வழிபடும் (Ancestoral Worship) மரபென்பதிலிருந்து இம்முன்னோரின் பெயராலே இம் மக்கள் வேந்தனின் மக்கள் என்று அறியப்பட்டு பின்பு தேவேந்திரன் என்றும் இன்று தேவேந்திர குல வேளாளர் என்றும் பெயர் பெறுகின்றனர். வேளாண் மக்களான இவர்கள் வேளாளர் என்று அறியப்படுவதும் தொழில் சிறப்புக் கருதியே ஆகும்.

### மள்ளர் பள்ளராக வீழ்ச்சியுற்ற விதம்

மள்ளர் பள்ளராக ஏன் வீழ்ந்தனர்? ஏன் தாழ்த்தப்பட்ட வகுப்புப் பட்டியலில் சேர்க்கப்பட்டனர் என்று கேள்வி எழும்பி அதற்கான விடையையும் வரலாற்று அறிஞர் கே.ஆர். அனுமந்தன் வருமாறு குறிப்பிடுவார்.

"தமிழ் மூவேந்தர் மன்னன் அரசு வீழ்ந்தது மதுரையில் (விஜயநகரப் பேரரசின் பிரதிநிதி அரசான) நாயக்கர் ஆட்சி, இருந்த காலத்தில்தான் இவர்களின் வீழ்ச்சி ஆரம்பமாகியுள்ளது. மராத்தியர்களும் நாயக்கர்களும் தமிழர்கள் இல்லையாதலால், அவர்கள் தங்களது சொந்தக் கரத்தால் மட்டும் ஆட்சியை வேரூன்ட முடியவில்லை. இங்கிருந்த சில சமூகத்தாரை அணைத்துக் கொள்ள வேண்டியிருந்தது. சோழ மண்டலத்தில் வன்னியரும் பாண்டிய மண்டலத்தில் கள்ளர்களும் அவர்களுக்குத் துணை நின்றார்கள். இதன் மூலம் பல மானியங்களைப் பெற்றுள்ளார்கள்" [26].

"நாயக்கர்கள் பாளையப்பட்டு முறை என்று ஒரு நில மானியத் திட்டத்தை உருவாக்கினார்கள். மொத்தத்தில் 72 பாளையப்பட்டுக்கள் உருவாக்கப்பட்டன. இப்பாளையங்களுக்குப் பாளையக்காரர்களாக தங்களுக்கு வேண்டியவர்களை நியமித்தார்கள். பெரும்பாலும் தெலுங்கர்களையும், ஒரு சில பகுதிகளில் குறிப்பாக இராமநாதபுரம், புதுக்கோட்டை ஆகிய பகுதிகளில் முறையே மறவர், கள்ளர், சமூகத்தைச் சேர்ந்தவர்களையும் நியமித்தார்கள். பூர்வீகமாகவே நிலவுடைமையாளர்களாக இருந்த பள்ளர்கள் பாளையப்பட்டு முறை மூலம் நிலவுடைமையை இழந்தார்கள். பலவந்தமாக நிலங்கள் பிடுங்கப்பட்டன. பறித்த நிலங்களைத் தங்களுக்கு வேண்டியவர்களுக்கு உரிமையாக்கினார்கள். இதன் மூலம் நில உடைமை பெற்றவர்கள் அதிகப் படியான நில வரியை தங்களது பண்ணைச் சொந்தக்காரர்களுக்குக் கட்ட வேண்டியிருந்ததால், காலப் போக்கில் இருந்த கொஞ்ச நஞ்ச நிலத்தையும் விற்று விட்டு நிலக் கூலிகளாக மாறி விட்டார்கள். அடுத்துப் பார்ப்பனர்களை குருக்களாக நியமிக்காததாலும் பார்ப்பனர்கள் மதமாகிய இந்து மதக் கோட்பாடுகளைப் பின்பற்றாததாலும், நாயக்க மன்னர்களைத் தங்கள் கைக்குள் வைத்திருந்த பார்ப்பன புரோகிதர்கள் இவர்களைத் "தீண்டத்தகாதவர்கள்" என்று அறிவித்தார்கள்.

வடஇந்தியாவில் சண்டாளர்களுக்கு விதிக்கப்பட்ட சமூகவிதிகளை இவர்களுக்குப் புகுத்தினார்கள். இவ்விதிகளை எல்லாம் பாளையக்காரர்களின் மூலம் திணித்து இவர்களை வீழ்த்தினார்கள்" [27]. என்று கே.ஆர்.அனுமந்தன் குறிப்பிடுவது ஏற்புடையதே. இதிலிருந்து நாயக்கர் ஆட்சிக் காலத்தில் இவர்கள் மீது தீண்டாமை திணிக்கப்பட்டு

பாளையக்காரர்களால் செயல்படுத்தப்பட்டிருப்பதை அறிகிறோம். ஆனால் மள்ளர்களுக்கும் தீண்டாமைக்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்பதை இவர்களின் வேளாண் வாழ்வும், மள்ளர் மரபும் நமக்குக் காட்டும்.

புதிய அரசுகள் வரும் போது பழைய அரசுகளைச் சார்ந்தவர்களின் உடைமைகளைப் பறிப்பது கொடுமைக்குள்ளாக்குவது. சமுதாய வரலாற்றில் நெடுகிலும் காணக் கூடியதே. அவ்வகையில் ஏற்கனவே அரசர்களாய் இருந்த மள்ளர் இனம் வேற்று மொழியாளர்களால் அடிமைப்படுத்தப்பட்டது. இதன் பின்னர் நடந்த ஆங்கிலேயர் வருகை, சமயப் பூசல்கள் போன்றனவும் வீரமிக்க இம்மக்களைத் தொல்லை செய்யவே செய்தன. இது குறித்து டாக்டர் குருசாமி சித்தர் வருமாறு குறிப்பிடுவார்.

"மள்ளர்கள் 16ம் நூற்றாண்டில் அரசியல் ரீதியாக முழுமையாக வீழ்ச்சியடைந்தனர். இந்த வீழ்ச்சியின் இன்னொரு பரிமாணம் வேற்று மொழி ஆட்சியாளர்கள் மள்ளர்களைப் பொருளாதாரம் மற்றும் சமூக ரீதியாக வீழ்த்தியது. இதில் தெலுங்க நாயக்கர்கள் பெரும் பங்கு வகித்தனர். இவர்களின் திட்டமிட்ட பள்ளேசல்கள் மள்ளர்களைச் சமூக ரீதியாக ஒடுக்குவதற்கும் வெற்றிகரமாகச் செயல்படுத்தப்பட்டது. தமிழ்நாட்டில் உள்ள அனைத்துப் பெரிய கோயில்களும் மள்ளர்களின் நிர்வாகத்திலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக பறிக்கப்பட்டது. தமிழர்களுக்கெதிரான இந்தக் கொடுமைகள் வெள்ளையர்கள் ஆட்சிக் காலத்திலும் தொடர்ந்தது" [28].

வெள்ளையர் ஆட்சியில் வெள்ளாளர்களும் தமது பங்குக்கு தேவேந்திரர்களின் நிலங்களைப் பிடுங்கியுள்ளதைப் பள்ளு நூல்கள் பலபடப் பேசுகின்றன.

"பள்ளு நூல்களில், கொழு, மேழி, போன்ற உழவுக் கருவிகளைத் தங்களிடமிருந்து பிறர் பறித்துக் கொண்டனர் என்று வரும் பள்ளனாரின் கூற்று இதற்கு அரண் சேர்க்கும்.

"விருதுக்கே காரைக் காட்டார் வழக்கிட்டு
மேழி சேரமுன் வேண்டியே கொண்டார்"

(முக்கூடற்பள்ளு - 83)

காரைக் காட்டு வேளாளர் தான் இங்கு குறிக்கப்படும் வேளாளர் ஆவார். இதே போன்று மேழியை மள்ளரிடமிருந்து பிறர் பறித்துச் சென்ற வரலாறு, பொய்கைப் பள்ளு, திருவேட்டை அய்யனார் பள்ளு, செங்கோட்டுப் பள்ளு ஆகிய பள்ளு நூல்களிலும் இதே முறையில் கூறப்பட்டுள்ளன.

"கலப்பை யாவும் வணிகர்கைக் கொண்டனர்
காணுங்காலை நகைப் பையா வென்பர்"
(பொய்கைப் பள்ளு - 101)

என்று வரும் பொய்கைப் பள்ளுப் பாடலில் வெளிப்படையாகக் கலப்பையாவையும் வணிகர்கைக் கொண்டனர் என்று வருகின்றது.

.................................... மேழியை
விந்தையாகிய வேளாளர் எங்கள்
விருதென்றே கொண்டு போனார்

(செங்கோட்டுப் பள்ளு - 427-428)

என்று வரும் செங்கோட்டுப் பள்ளுப் பாடலில் "மேழியை வேளாளர் எங்கள் விருதென்றே கொண்டு போனார்" என்ற செய்தி வெளிப்படையாக உள்ளது. "விந்தையாகிய வேளாளர்" என்பது நுட்பமான ஆட்சியாக உள்ளது. உழவிற்குரிய கலப்பையை எங்களிடமிருந்து, உழவுத் தொழிலுக்கே தொடர்பற்றவர் கொண்டு சென்றார். அவர்களுக்கு அது விருதாக வெற்றிச் சின்னமாக கொடியில் ஏறியது. நாங்கள் நிலம் இழந்தவர்கள் ஆனோம் என்னும் குரல் இதில் உள்ளது. மேழியைப் பறித்தனர் என்பது நிலங்களைப் பறித்தது என்று ஆகும் என்பார் டாக்டர் சு. வேங்கடராமன் [29].

இது போன்றே தமிழகம் முழுமையும் தேவேந்திரர்கள் பாளையப்பட்டுகளின் நெருக்குதலுக்கு ஆளானார்கள். போடிநாயக்கனூர் பாளைப்பட்டின் ஆட்சியுரிமை பெற்ற போனாய்க்கன் அங்கிருந்த மள்ளர்களின் நிலங்களைப் பிடுங்கிய விதம் கதைப் பாடலாகப் பாடப்படுகின்றது. அவற்றில் சில வரிகள் வருமாறு

"ஆயிரமாயிரம் மாடு பூட்டி
அம்பாரமாய் நெல் அடிச்சு
ஆயிரவேலி நஞ்ச புஞ்சை கட்டி
அனுதினமும் அன்னதானம்
ஆக்கிப் படைச்ச காலாடியார்
பார்புகழும் பாண்டியர் குலம்
பாண்டி பண்ணாடி
பகை முறிக்கும் தேவேந்திர குலத்தார்
படை திரட்டும் காலாடியார்
நடுவும் நீதியும் நன்றாய் தான் விளங்க
குடும்பர்கள் ஆளுமிந்த
அரச குடும்பனாரும்

அவர் தம் மாப்பிள்ளையார்
அழகப்பன் காலாடியாரும்
அரசாண்ட பூமியிது
அடைக்கலம் என்று வந்தார், வடுகர்
அண்டி நிற்க இடம் கேட்டார்
போனாங்கனூரிலே
கிடுட்டணப்ப நாய்க்கன் தான்
சமீனாய் அரசாண்டான்
ஆந்திர நாட்டிலிருந்தது
கொல்லன், கம்மாளன் என்று
ஆயிரம் பேராய் குடியமர்த்தினான்
ஆள்பலமும் ஆட்சி பலமும்
அதிகார பலமும் தான் சேர்த்து
அடாத செயல் செய்தான்
......................................
பொங்கிட்ட குடும்பரும் காலாடியாரும்
வடுக நாயக்கனோடு
வன்பகை கொண்டிட்டார்
ஆயிரம் பேரைக் கொன்றிட்டான்
ஆயிரம் வேலி கழனியை
அபகரித்தான் ...................... [30]

என்று நீளும் இந்நாட்டுப் பாடல் நாயக்கர் ஆட்சியில் மள்ளர்கள் நிலத்தையும் ஆட்சியையும் இழந்தது குறித்துப் பேசும்.

மள்ளர் என்ற பெயரில் வேளாண் மாந்தர்களாக விளங்கிய இம்மக்கள் நாயக்கர் கால இலக்கியங்களில் தான் பெருமளவில் பள்ளர் என்று சுட்டப்படுகின்றனர். மள்ளர் என்பது வீரத்தைக் குறிக்கும் பள்ளம் என்பது வீழ்ச்சியைக் குறிக்கும். ஒரு தெலுங்குச் சொல்லாகவும் பள்ளர் என்ற சொல் விளங்குகின்றது. ஜி.ஒப்பர்ட் கூற்றுப்படி "தெலுங்கில் பள்ளம் என்பதற்கு நஞ்சை என்று பொருள்படும். ஆக தெலுங்கர்களின் தமிழக வருகைக்குப் பின்னர் தான் இங்கே நஞ்சைப் பயிர் செய்தவர்களைப் பள்ளர் என்று கூறும் வழக்கம் ஏற்பட்டிருக்க வேண்டும்" [31] என்ற கருத்து ஏற்புடையதே ஆகும். மேலும் மள்ளர் - பள்ளர் என்ற இரண்டு சொல்லும் பன்னூ நூலில் இடம் பெற்றிருப்பதையும் இங்கே நினைய வேண்டும். ஆக நாயக்கர் ஆட்சிக் காலத்தில்தான் மள்ளர் பள்ளராக வீழ்ச்சியுற்றனர் என்பதே வரலாறு காட்டும் உண்மையாகும்.

## தேவேந்திரர்களின் தோற்றக் கதைகளின் வழி தேவேந்திரர் வரலாறு

இம்மக்களிடம் வழக்கில் இருக்கிற நாட்டுப்புற வழக்காறுகளின் வழி குறிப்பாக இச்சமூகத்தின் தோற்றம் குறித்துச் சொல்லப்படும். தொன்மக் கதைகளில் இம்மக்களின் வரலாற்றைக் கணித்தறிய முடியும். மக்களின் அனைத்து வழக்காறுகளிலும் அம்மக்களின் வரலாறு ஒழிந்து கிடக்கின்றன என்று சொல்வதற்கேற்ப இம்மக்களின் தோற்றம் (Orgin Myth) குறித்தபின் வரும் கதைகள் வருமாறு.

**கதை 1.** தேவேந்திரனுக்கும் நீர் நிலையில் உள்ள தாமரையில் உரையும் திருமகளுக்கும் பிறந்த குழந்தையின் வழியினரே தேவேந்திரர்கள் ஆவர் [32].

**கதை 2.** வேறொரு புராணக் கதைப்படி ஒரு காலத்தில் இந்திரனின் வியர்வை தண்ணீரில் வளர்ந்திருந்த செடியில் விழுந்ததாகவும் அதிலிருந்து ஒரு குழந்தை தோன்றியதாகவும் அக் குழந்தையே பள்ளர்களுக்கு மூதாதை என்றும் சொல்லப்படுகிறது. அம் மூதாதையின் வழித் தோன்றல்களே இன்று வாழும் தேவேந்திரர்கள் ஆவர் [33].

**கதை 3.** இந்திராணிக்கும் இந்திரனுக்கும் பிறந்த தேவேந்திரன், இந்திரன் துப்பிய எச்சிலில் வயல் செய்து நெல் நட்டதாகவும் பின்பு அந்த நெல்லை பூமிக்கு கொண்டு வந்து வேளாண்மை செய்ததாகவும் இவனே தேவேந்திர குல வேளாளர்களின் மூதாதை என்றும் சொல்லப்படுகிறது [34].

**கதை 4.** செங்கோட்டுப் பள்ளு தேவேந்திர குல முதல்வன் மூவேந்தர் வேண்டுகோளின்படி மேலோகம் சென்று நெற்பயிரைக் கொண்டு வந்து பூமியில் நடவு செய்ததாகக் கூறுகிறது [35].

**கதை 5.** தேவேந்திரனுக்கும் இந்திராணிக்கும் பிறந்த குழந்தை பள்ளிக்குச் சென்று அங்கு படிக்காமல் உழவு வேலை செய்து விளையாடியதால் அக்குழந்தை விருப்பப்படி பூலோகம் வந்து வேளாண்மை செய்து வாழ்ந்தது [36].

**கதை 6.** ஒரு காலத்தில் கடவுளுக்கு அரசனான தேவேந்திரன் நீரில் வளர்ந்திருந்த செடியில் விழுந்து விட்டதாகவும் உடனே அதிலிருந்து ஒரு குழந்தை உற்பத்தியானதாகவும் அக்குழந்தையே தேவேந்திர குல வேளாளர்களின் ஆதிமுதற் குழந்தை என்றும் ஒருகதை சொல்கிறது [37].

**கதை 7.** பார்வதியும் பரமசிவனும் உலகைச் சுற்றிப் பார்க்கின்ற பொழுது பார்வதிக்கு வியர்க்கிறது. வியர்வையைத் துடைத்துப் பார்வதி கீழே எறிகிறாள் அவ்வியர்வை குளத்திலுள்ள வல்லக் கொடியில் விழுந்து

விட அங்கு ஒரு குழந்தை தோன்றுகிறது. அதைப் பார்வதியும், பரமசிவனும் எடுத்துக் கழியன் என்று பெயர் சூட்டி வளர்க்கின்றனர். இவன் மேலோகத்தில் வயல் செய்து முதன் முதலில் நெல்லைக் கண்டு பிடித்து பயிர் செய்கிறான். இந்த நெல்லின் அரிசியால் செய்த சாப்பாட்டைச் சிவனுக்குப் பார்வதி பரிமாறுகிறாள். சிவனும் சாப்பிட்டு விட்டு பாராட்டுகிறார். சிவன் இதை எங்கே கண்டுபிடித்தாய் என்று கேட்க கழியன் தான் காடு கொண்டு வயலாக்கிய ஆயிரம் ஆயிரம் வயல்களைக் காண்பிக்க பரமசிவனும் வயல்களில் நெல் விளைந்திருப்பதைப் பார்த்து அதிசயப்பட்டு நீ ஒருவனாகவா இதைச் செய்தாய் என்று கேட்கிறார் பின்பு சிவனின் ஆணைப்படி தேவலோகத்தில் இரு கன்னிகளை அழைத்துக் கொண்டு பூலோகம் வந்து நெல் பயிரிட்டு இங்கேயே தங்கி விடுகிறான் [38].

**கதை 8.** பூலோகம் வந்த கழியன் உலகம் முழுவதும் நெல்லைப் பயிர் செய்து உலகைச் செழிக்கச் செய்கின்றான். பின்பு ஒரு காலத்தில் உலகம் நீரால் அழிகின்றது. அச்சமயம் கழியனின் மகனும் அவனுடைய மருமகளும் சுரைக் குடுக்கையில் நுழைந்து தண்ணீரில் விழாமல் தப்பிக்கின்றனர். இவர்களின் வழி வந்தவர்களே தேவேந்திர குல வேளாளர்கள் ஆவர் [39].

**கதை 9.** ஈஸ்வரனும், ஈஸ்வரியும் ஏழைமக்களுக்குப் படியளந்து கொண்டிருக்கும் போது உலக மக்கள் எல்லாம் ஈஸ்வரன் காலில் விழுந்து வரம் கேட்டனராம். காலில் விழுந்தவரெல்லாம் வரமாகச் செல்வம், பணம், தங்கம் எனக் கேட்டனராம். குடும்பன் மட்டும் காலில் விழுந்து செந்நெல், மம்பட்டி, வயலும் வரமாகக் கேட்டானாம். ஈஸ்வரன் மிகவும் சந்தோசப்பட்டு மூன்று வரமும் கொடுத்தாராம். அப்போதிருந்தே குடும்பமார்கள் நெல்லையும் நெல் விவசாயத்தையும் செய்து வருகின்றனர் [40].

**கதை 10.** பார்வதிக்கும் பரமசிவனுக்கும் பிறந்த தேவேந்திர மகன், பார்வதி குளித்து விட்ட நீரில் விவசாயம் செய்து விளையாடிக்கிட்டு இருக்கும் போது, ஒரு அன்னப்பச்சி வயலில் வந்து நெல்லைக் கக்கி விட அந்நெல் முளைத்து பயிராகிறது. இதனை எடுத்து வந்து பூலோகத்தில் நட்டு வேளாண்மை உண்டாக்கியதாக ஒரு கதை சொல்லப்படுகிறது [41].

மேற்கண்ட கதைகளில் 1, 2, 4, 6 ஆகியன பார்வதி பரமசிவனுடன் இணைத்து தேவேந்திரனின் பிறப்பு சொல்லப்படுவது போன்று பழனி பட்டயத்திலும் பரமசிவனின் வேர்வையிலிருந்து தேவேந்திர குல முதல்வன் தோன்றினான் என்று சொல்லப்படுகிறது. இக்கதை அல்லாத 3,4,5,7,8,9,10 ஆகியன தேவேந்திரனுக்கும் இந்திராணிக்கும் பிறந்தவர்கள்

தேவேந்திரர்கள் என்று சொல்கின்றன. இவ்வாறு சொல்லப்படும் கதைகள் தேவேந்திரனின் வழி வந்தோர்கள் நெல்லை முதன் முதலில் பூமியில் பயிரிட்டதாகச் சொல்கின்றன. இங்கு இவர்களுக்கு மட்டுமே கை தேர்ந்த நெல் வேளாண்மை புராணக் கதை வடிவம் பெற்றிருக்கிறது என்பதே உண்மை.

மருதநில மக்களான இம்மக்கள் வேளாண்மையை முதன்மைத் தொழிலாகக் கொண்டு வாழ்ந்து வருவதை மிகைப்படுத்தி உரைக்கும் இது போன்ற கதைகளில் சில கற்பனைகள் இருக்கலாம் ஆனால் இக்கதைகள் எல்லாம் சேர்ந்து ஒரு அடிப்படை உண்மையைச் சொல்லுவதற்காக இம்மக்களால் திரும்பத் திரும்பச் சொல்லப்பட்டு வந்திருக்கின்றன என்பதை நாம் இங்கு நினைய வேண்டும். மேலும்

"வேந்தன் மேய தீம்புனல் உலகம்" எனும் தொல்காப்பியச் சான்றும், மருதநிலத்தின் தலைவனே இந்திரன் எனச் சொல்வதும் இங்கு நினையத்தக்கது. இக்கதைச் சான்றுகள் அல்லாமல் இம்மக்களிடம் வழக்கில் உள்ள சடங்குகளிலும் பாடல்களிலும் தாங்கள் தேவேந்திரன் வழி வந்தவர்கள் என்றும் நெல்லைக் கண்டு பிடித்தவர்கள் என்றும் திரும்பத் திரும்பச் சொல்லும் வழக்காறுகளைக் காண முடியும். காட்டாகத் தேவேந்திரர்களின் தோற்ற வருணனைப் பாடல்களில் பாடப்படும் பின்வரும் பாடலிலும் நெல்லை இவர்களே கண்டுபிடித்ததாகக் கூறுவதைக் காண முடியும்.

"தேவாதி தேவர்களான
தேவேந்திரச் சாதியர்
..............................
சேத்துக் கால் செல்வரான
செந்நெல் முடிக் காவலரான
பள்ளனும் பள்ளியும்
காலினால் உழப்பிய செந்நெல்லை
தேவர்கள் பாலால் அமிர்தம் பொழிவாராம்
கொட்டுடன் கோல மேழி கலப்பை
நெட்டுடன் பிரம்பு சங்கிலி
நேரான கால் கயிருடன்
மொட்டை வெள்ளானை ஏறி
தெய்வ குலத்தில் தேவரிடத்தில் (மேலுலகம்)
இஞ்சி எலுமிச்சை இனிய பலாவும்
வெள்ளரிக் கொடியும் வேனாமா மரமும்
சந்தனமும் கமுகும் சாதிலிங்கமும்

தென்னை பொன் உலக்கோலும்
பூந்தாமரையும் 4448 நெல்விதையும்
யானைவால் மயிரினால்
மூக்கனாங் கயிர் கொண்டு
கோர்த்து நூலேணி வழியாக
பூலோகம் இறங்கி
ஓடையை குறுக்காட்டி
ஏரிகள் போட்டு
வாகன பூமியை வயல்களாகச்
சேர்த்து உழுது விதைத்து
வேளாண்மை செய்து
................................[42]

என்று குறிப்பிடும் நாட்டுப் புறப்பாடலில் தெய்வலோகத்தில் இருந்து நெல் தேவேந்திரரால் கொண்டு வரப்பட்டதை வரலாறாகப் பாடக் காண்கின்றோம். இதே போன்று இடைக்காலத்தைச் சேர்ந்த கரிவலம் வந்த நல்லூர் கல்வெட்டில் இம் மரபினர் பாண்டியன் உக்கிரப் பெருவழியால் தெய்வ லோகத்திலிருந்து சென்நெல், கன்நெல், கதலி, பனை முதலிய விதைகளுடனும் காளையுடனும் பூமிக்கு அழைத்து வரப்பட்டதாகவும் அவர்கள் ஒரே நாளில் பன்னீராயிரம் கிணறுகள் தோண்டி வேளாண்மை கண்டு நாட்டைச் செழிப்பித்ததாகவும் கூறுகின்றன [43]. இச்சான்றினைக் கொண்டும் பேரூர் புராணத்தின்படி சிவன் பள்ளராக மாறி வயலில் நெல் வேளாண்மை செய்த புராணக் கதையின் படியும், இம்மக்களுக்கும் நெல் வேளாண்மைக்கும் இருக்கிற தொடர்பை அறியலாம். மேலும் நெல் வேளாண்மையைச் சிறப்பிக்கும் பள்ளு நூல்களில் தேவேந்திரர்களே தலைமை மாந்தர்களாகத் திகழ்வதும் கொண்டும் இம்மக்களுக்கும் நெல் வேளாண்மைக்கும் உள்ள தொடர்பை உறுதி செய்யலாம். ஆக இம்மக்கள் குறித்த தோற்றக் கதைகள் வழக்காறுகளின் வழி இம்மக்கள் தங்களை இந்திரனின் வழித் தோன்றல்கள் என்றும் நெல்லை இவர்களே கண்டு பிடித்தவர்கள் என்றும் கூறுவதைக் காண்கின்றோம். இன்றளவிலும் இம்மக்கள் வேளாண்மக்களாக வாழ்வதும் இக்கருத்தை மேலும் உறுதி செய்யும். இம்மக்களின் நெல் சார்ந்த வேளாண் பண்பாட்டைக் (Paddy Culture) குறித்து 6வது இயல் விரிவாக ஆராய்கின்றது.

**வரலாற்றுச் சான்றுகளில் தேவேந்திரர்களின் வரலாறு**

"2000 ஆண்டுக்கு முற்பட்ட கல்வட்டம் ஒன்று தூத்துக்குடி மாவட்டம் விளாத்திகுளம் அருகே காணப்படுகின்றது. இதனை இங்குள்ள தேவேந்திர

குலத்தார் மொட்டை இருளப்பசாமி எனும் பெயரில் வழிபட்டு வருகின்றனர். இக்கல்வட்டத்திற்குள் நடப்பட்டுள்ள சிறு தூண் (அதாவது மொட்டை இருளப்பசாமி) 700 ஆண்டுக்கு முன்பு நடப்பட்டதென்றும் இது போன்று ஓட்டப்பிடாரம் வட்டத்தில் பல கல் தூண்கள் கல்வெட்டுப் பொறிப்புடன் காணப்படுகின்றன. மேலும் இப்பகுதியில் கண்மாய்க்கரை முழுவதும் 2000 ஆண்டுகளுக்கு முற்பட்ட கறுப்பு நிறப்பானை ஓடுகள் சிதறிக்கிடக்கின்றன. இங்கு தற்செயலாகத் தோண்டும் போது முது மக்கள் தாழிகளும் தென்படுவதாக மக்கள் கூறுகின்றனர். சுமார் 1400 ஆண்டுகளுக்கு முன் இப்பகுதி வெண்டில நாடு என அழைக்கப்பட்டது என்று பந்தல் குடியில் உள்ள சமண சிற்பத்தில் பொறிக்கப்பட்டுள்ள ஒரு கல்வெட்டால் அறிய முடிகிறது. வெண்டிலம் என்றால் வெண்மையான ஒரு வகை மண் நிறைந்து காணப்படும் பூமி என்று பொருள். வெண்டியலப்பள்ளர் எனும் ஒரு பிரிவு பழனிப்பட்டயத்தில் காணப்படுகின்றது [44]. வெள்ளையரை எதிர்த்துப் போரிட்ட பூலித்தேவனின் படைத்தளபதி வெண்ணிக் காலாடி என்ற பெயரில் அழைக்கப்படுகின்றார். வெள்ளையரை எதிர்த்துப் போரிட்டு வீரமரணமடைந்த இவருக்கு பூலித்தேவன் 1760ல் வெண்ணிக் காலாடி எனும் பெயரில் நடுகல் நட்டு வைத்துள்ளார் [45]. இவ்வெண்ணிக்காலாடியின் வழிவந்தோருக்கு அதாவது பிறக்குடையக் குடும்பன் மகன் சிவனுக்குடும்பனுக்கு சிந்தாமணி பெரியகுளம் கண்மாய் பராமரிப்பு வழங்கப்பட்டுள்ள செய்தி 1820ல் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுச் சான்றுகளின் வழி தெரியவருகிறது [46]. இவ்வாறான வரலாற்றுச் சான்றுகளையும் ஓட்டப்பிடாரம் பகுதியிலும் தூத்துக்குடி மாவட்டத்திலும் மிக நெருக்கமாக வாழும் வெண்ணிக் காலாடியின் வம்சா வழியினர் இன்றும் மிகுந்த எண்ணிக்கையில் வாழ்ந்து வருவதைக் கொண்டும் இங்கு குறிக்கப்படும் வெண்டில நாடு தேவேந்திரர்களுடன் தொடர்புடைய நாடென்றே கருத இடமிருக்கின்றது.

## உயர்ந்தோர் பள்ளர்

கல்வெட்டியல் அறிஞர் இரா.நாகசாமி 23-10-98 தினமணியில் உயர்ந்தோர் பள்ளர் எனும் தலைப்பில் இம்மக்கள் குறித்த சில வரலாற்றுச் சான்றுகளை வருமாறு தருவார் "பள்ளர் குலத்தைச் சிலர் தாழ்ந்த குலத்தோர் எனக் கருதுகின்றனர். இது வரலாற்றுக்கு புறம்பான கருத்து. பள்ளர்கள் சமுதாயத்தின் உயர் நிலை வகித்தனர் குறிப்பாக, சோழ மன்னர்கள் காலத்தில் பல இடங்களில் அவர்கள் குறுநிலத் தலைவர்களாகத் திகழ்ந்துள்ளனர். அக்காலத்தில் பள்ளிகள் "ஆளப்பிறந்தான்" என்ற பட்டம் பெற்றிருந்தனர். நாட்டைக் காப்பதற்காக தங்கள் உயிரைத் தியாகம் செய்து வீரம் விளைத்த பள்ளிகளைப் பற்றி சில கல்வெட்டுக்கள் காட்டுகின்றன.

இவ்வாறு, பள்ளிகளைப் பற்றி பல கல்வெட்டுக்கள் பள்ளிகளை உயர்ந்தோர்களாகத் தெரிவிக்கின்றனவே ஒழிய, தாழ்ந்தோராக ஒரு கல் வெட்டில் கூட குறிப்பு இல்லை. இவர்கள் சமுதாயத்தில் வகித்த நிலை பற்றிய இந்தச் சான்றுகளைப் பார்க்கும் போது உயர் நிலையில் இருந்தது தெளிவாகத் தெரிகிறது" என்பார் [47]. தமிழக முதல்வர் மு.கருணாநிதி அவர்கள் பாயும் புலி பண்டாரக வன்னியன் நாவலில் இத்தேவேந்திர இனத்தைச் சேர்ந்த தளபதி சுந்தரலிங்கக் குடும்பனாரை அறிமுகம் செய்யும் போது "பாண்டிய மண்ணின் உரிமைக்காக வீரப்போரிட்ட வெட்டும் பெருமாளின் பரம்பரையில் வந்தவர்" என்று குறிப்பிடுவர். இவ்வெட்டும் பெருமாள் பாண்டியன் [48] குறித்து நா.வானமாமலை வருமாறு குறிப்பிடுவார்.

"கன்னடியர்" படையெடுப்பின் போது பாண்டியர்கள் எதிர்த்துப் போராடிய வரலாற்று நிகழ்ச்சியை ஐவர் ராசாக்கள் கதை எனும் கதைப் பாடல் குறிப்பிடும். இது போன்றே பஞ்ச பாண்டியர் கதை, 'வெட்டும் பெருமாள் கதை' 'கன்னடியன் படைப்போர்' முதலிய கதைப் பாடல்களும் கன்னடியர் பாண்டியர் போர் பற்றியும் முடிவில் பாண்டியர் உயிர் நீத்ததாகவும் கூறுகின்றன.

கன்னடியன் பாண்டியன் போர் பல இடங்களில் நடந்ததாக நெல்லை மாவட்டத்தில் செவி வழிச் செய்திகள் வழங்கி வருகின்றன. அதற்கு ஆதாரமாக சிற்சில தொல் பொருள் சான்றுகளும் கிடைத்துள்ளன.

கயத்தாற்றின் அருகில் வெங்கலராசனுக்கும் வெட்டும் பெருமாள் ராசாவுக்கும் போர் நடந்ததாகவும் அப்போரில் கயத்தாற்றுக் கோட்டை அழிந்ததாகவும் வெட்டும் பெருமாள் போரில் மாண்டதாகவும் செவிவழிச் செய்திகள் வழங்கி வருகின்றன. இதற்குச் சில கல்வெட்டுக்களும் இல வேலங்காலில் காணப்படும் சிற்பங்களின் சித்திரங்களும் தொல் பொருள் சான்றுகளாகக் காட்டப்படுகின்றன. எனவே கயத்தாற்றில் ஒரு போர் நிகழ்ந்தது என்றும் அப்போரில் வெங்கலராசன் வெற்றி பெற்றான் என்றும் முடிவு செய்யலாம். இப்போரைப் பற்றிய கதை தான் "வெட்டும் பெருமாள் பாண்டியன் கதை" இக்கதை சாதி வரலாற்று நூல்கள் சிலவற்றில் காணப்படினும் அச்சு நூலாகவோ ஏட்டுப் பிரதியாகவோ இது வரை எங்கும் அகப்படவில்லை [49] என்ற நா. வானமாமலை கருத்துப்படி கன்னடியர்களின் ஆதிக்கத்தை எதிர்த்துப் போரிட்ட தமிழ் மன்னர்களான ஐவர் ராசாக்களில் (பஞ்ச பாண்டவர்கள்) வெட்டும் பெருமாள் பாண்டியனும் ஒருவர் என்பதை அறிகிறோம்.

கி.பி.1528ல் நாயக்கர் ஆட்சிக் காலத்தில் எழுதப்பட்ட பழனிச் செப்புப் பட்டயம் பழனி முருகன் கோயிலில் தேவேந்திரர்களுக்கு இருக்கும்

வழிபாட்டு உரிமை குறித்தும் இவர்களால் பரிபாலனம் செய்யப்படும் பள்ளர்மடம் குறித்தும் அதை நிர்வாகம் செய்யும் முறை குறித்தும் விரித்துப் பேசும். மேலும் தேவேந்திரர்களுக்கு உண்டான பட்டங்களான குடும்பன், தேவேந்திரகுலத்தான், பலகன், பண்ணாடி, மூப்பன், காலாடி, எனும் பட்டத்துடன் அமையும் பல நாட்டுத் தலைவர்கள் குறித்தும் 84 குலப் பிரிவுகள் குறித்தும் பேசும் [50]. பழனி முருகன் கோயிலுடன் உறவுடைய பழனி இடும்பன் கோயிலின் முழு உரிமையும் இம்மக்களிடமே இன்றும் இருக்கிறது. இக்கோயிலில் பூசை செய்து விட்டுத்தான் பழனி கோயிலுக்குச் செல்ல வேண்டுமென்பதும் இங்கு நினைக்கத்தக்கது [51]. இதே போன்று நத்தம் செப்புப் பட்டயம் 1828ல் எழுதப்பட்டது. தேவேந்திரர் இனத்தவர் ஆதீன குருக்களாக நியமிக்கப்பட்டது குறித்துப் பேசும். இதிலும் இம்மக்களின் 64 வகைக் குலப் பிரிவுகள் பேசப்படுகின்றன [52].

கோயமுத்தூர் பேரூரில் அமைந்துள்ள பட்டீஸ்வரர் கோயிலில் ஆண்டுதோறும் ஆனிமாதத்தில் தேவேந்திர குல வேளாளர் நாற்று நடவு எனும் இந்திர விழாவை நடத்துகின்றனர். இவ்விழா சிவன் மள்ளராக மாறி வயலில் நடவு செய்ததை நினைவு கூர்வதற்காக நடத்தப்படுவதாகும். இக்கதை வருமாறு. கொங்கு நாட்டிற்கு சுந்தரர் மூன்றாவது முறையாக வருகை தந்த போது பேரூருக்கு வருகை புரிந்தார். அச்சமயம் பேரூரில் குடி கொண்டிருக்கும் பட்டீஸ்வரர் அருகிலிருக்கும் வயலில் மள்ளனாக (பள்ளராக) மாறி வேலை செய்கின்றார். பார்வதி தேவியார் பள்ளியாக கழனியிலே நாற்று நடுகின்றார். விநாயகக் கடவுளும் முருகக் கடவுளும் மள்ளச்சிறார்களாக மாறி வயலில் விளையாடினர். திருமால், பிரமன், இந்திரன் முதலிய தேவர்கள் நுகம், கலப்பை, மேழி, கொழுவு, வார், தார்க்கோல், எருது, விதைகள், நாற்று, ஆகிய அனைத்து உழவுக் கருவிகள் இடு பொருட்களுடன் வந்தனர். இலக்குமி, சரசுவதி, இந்திராணி முதலிய தேவ மகளிர் மள்ளத்தியர்களாக மாறி பச்சை நாயகி உமாதேவியோடு வயலில் நாற்று நட்டனர். இவ்வாறு இவர்கள் கழனியிலே வேலை செய்வது தெரியாது கோவிலுக்குள் சென்ற சுந்தரர் சிவபெருமானை அங்கே காணப்பெறாமல் நந்தியிடம் வினவ நந்தி கடைக்கண் காட்ட வயலில் வந்து சுவாமியையும் அம்மையையும் கண்டு வணங்கினார். இது திருப்பேரூர்ப் புராணம் பள்ளுப் படலம் தரும் செய்தி [53] இச்செய்தி குறித்து ஆய்வுரை எழுதியுள்ள கோவைக் கிழார் வருமாறு குறிப்பிடுவார்.

"சுந்தரர் கொங்கு நாட்டிற்கு வந்த காலம் கி.பி.850 ஆகும். அக்காலத்திலிருந்தே பள்ளர்களும் கோயில் விழாக்களில் கலந்து கொண்டிருப்பார்கள் என்ற கருத்தைப் பள்ளுப்படலத் திருவிளையாடல் என்ற ஐதிகத்திலிருந்து நாம் ஊகிக்க முடியும். இந்த நாளிலும்

அத்திருவிழாவைக் கொண்டாடுவதற்காக அமைந்த நாற்றுநடவு உறசவத்திலே அவர்கள் கலந்து கொள்வது போல வேறு தலங்களில் நாம் பார்க்க முடியாது" [54] என்பார். இதிலிருந்து கி.பி.850க்கு முன்பிருந்தே இம்மக்கள் இத்திருவிழாவை நடத்தி வந்திருப்பர் என்பதை அறியலாம்.

இதே போன்று அவினாசியிலுள்ள அவிநாசியப்பர் கோயிலும் 12ம் நூற்றாண்டிலிருந்து தேவேந்திர குல வேளாளரின் முழு உரிமையிலேயே இருந்ததென்பதை அறிய முடிகிறது [55]. ஆனால் தற்சமயம் இவ்வுரிமை இவர்களிடமில்லை. இருப்பினும் விழா தொடக்கம் இம்மக்கள் வாழும் தெருவிலிருந்து தான் இன்றும் தொடங்குகின்றது. திருச்செந்தூர் முருகன் கோயிலில் 15 மடங்கள் வெவ்வேறு தேவேந்திர குலப்பிரிவினருக்கு இருப்பதைப் பார்க்க முடியும். சென்னையில் திருவல்லிக்கேணியில் பார்த்தசாரதி கோயில் பட்டயத்தின் படி அது பள்ளரால் கட்டப்பட்டது என்பார் ந.சி.கந்தையா பிள்ளை [56]. இப்படியாக தமிழகம் முழுவதும் ஆன்மீக வரலாற்றில் தேவேந்திரர்கள் முன்னுரிமை பெற்றிருந்ததை அறிகிறோம். தேவேந்திரர்கள் பெரும்பாலாக வாழும் அனைத்து ஊர்களிலும் கோயில்களிலும் தேர் வடம் பிடித்து இழுக்கும் உரிமை இவர்களுக்கே இன்றும் இருக்கின்றது. இதனால் இவர்களைத் "தேர்வேந்தர்" பரம்பரையினர் என்று சொல்லும் வழக்கம் காணப்படுகின்றது.

"மெச்சும் பெருமாள் பாண்டியன் கதை" எனும் கதைப் பாடலில் பிற்காலப் பாண்டிய மன்னர்களான வீரக்கரையாள ராசா, வீரமார்த்தாண்ட ராசா என்பவர்கள் குறிக்கப்படுகின்றனர். இவர்கள் மதுரையை விட்டு நெல்லை வந்து கோட்டை கட்டி அங்கே முதன் முதலில் 40 குடும்பமார்களைக் குடியமர்த்தியாகக் கதை அமைந்துள்ளது. அப்பாடலடிகள் வருமாறு.

"அண்ணன் தம்பி இருபேரும்
நம்நாடு செல்ல வேண்டும்
நலமான குடும்பக்கமார் (தேவேந்திரர்கள்)
நாற்பது விட்டுக்காரர்
நலமுடனே கொண்டு வந்து
குடியேத்தி வைக்க வேண்டும்
குணமுடனே வாழ வேண்டும்
அண்ணன் தம்பி இருபேரும்
அந்த நாடு வந்த சேர்ந்தார்
நாற்பது விட்டு பள்ளர்களை
நலமுடனே கூட்டி வந்தார்

......................................
நாற்பது வீட்டு குடும்பக்கமார்
நலமுடனே ஒன்று கூடி
சிவன் கோயில் கட்டியல்லோ
சிறப்பாகத்தான் முடித்தார்
காளி கோவில் கட்டினார்கள்
கட்டுடனே குடும்பக்கமார்கள்
சுத்து கட்டு மாளிகையாம்
சூழ நல்ல அங்கணமாம்
கோட்டைகளும் கொத்தளமும்
கோபுரமும் துறவுகளும்
துரிதமாகக் கட்டி வைத்தார்"[57]

என்றவாறான பாடல் வரிகள் தேவேந்திரர்கள் அரண்மனையுடன் கோயில் கட்டியுள்ளமையையும் அறிய முடியும். இங்கு குறிக்கப்படும் பாண்டியர்களை வெட்டும் பெருமாள் பாண்டியனின் வம்சாவளியென்றும் கருத இடமிருக்கின்றது. காரணம் புதிய நாடு அமைக்க 40 குடும்பமார்களை இவர்கள் தேர்வதிலிருந்து இம்மன்னர்களும் மள்ளர்களாகத் தான் இருக்க முடியுமென்றும் கருதலாம். காரணம் இக்கதை நடந்த காலம் 500 ஆண்டுகளுக்கு முற்பட்டதாக இருப்பதாக இந்நூலின் பதிப்பாசிரியர் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது[58]. நெல்லை மாவட்டம் ஆதிச்ச நல்லூர் பஞ்சபாண்டவர் கோயில் உரிமை இன்று வரை இவர்களிடமே இருந்து வருவதும் பிற்காலப் பாண்டியர் அதாவது பஞ்ச பாண்டியர் வரலாற்றுடன் இவர்கள் வரலாறு தொடர்புடையதாகவே தெரிகின்றது.

தென் மாவட்டங்களில் 1968 நில அளவைப் புள்ளி விபரப்படி தேவேந்திரர்களிடமே மிகுதியான நிலங்கள் இருந்தது தெரிய வருகிறது [59]. கோவை மாவட்டத்தில் இம்மக்கள் மணியகாரராக கிராம அதிகாரியாக (Village Munsifs or Magistrates) சென்ற நூற்றாண்டில் இருந்து வந்ததை எட்கார்தர்ஸ்டன் குறித்து வைத்துள்ளார்[60]. ஈரோடு மாவட்டம் கொடிவேரியில் 1842 - 1847இல் கட்டப்பட்ட கொடிவேரி அணை பழனப் பண்ணாடி எனும் தேவேந்திரரால் கட்டப்பட்டது. இது 24,500 ஏககருக்கு நீர்ப்பாசன வசதியளிப்பது ஆகும்[61]. கொங்கு குறுப்பு நாட்டில் விசயமங்கலத்தில் மக்கள் 18ம் நூற்றாண்டில் இடங்கை - வலங்கைப் பிரிவு பட்டுப் பூசலிட்டு வந்தனர். திப்புசுல்தானின் அந்தியூர்க் கச்சேரி கிரிரேசாயபு பாட்சா அங்கு நாடு விசாரணைக்கு வந்தது. இத்தீர்ப்புப பட்டயத்தில் பள்ளர் வகையில் வீரபத்திரப் பண்ணாடி, குட்டிப பண்ணாடி, இருளப்பப் பண்ணாடி, சோணபபண்ணாடி, ஆகியோர்

குறிக்கப்படுகின்றனர். பள்ளர் உட்பட இடங்கையார் கத்தி, பஞ்சவர்ண விருது, பஞ்சவர்ணக்குடை, அர்த்தநாரிக்குஞ்சம், பஞ்சவர்ணப் பாவாடை, பகல்த்திவட்டி, தெருமேல் மிரவணை ஆகிய உரிமைகளைப் பெற்றுள்ளனர். காஞ்சிபுரத்தில் திர்ந்த பிரகாரம் இந்த உரிமை இடங்கையாருக்கு அளிக்கப்பட்டன. அதனால் கொங்கு நாட்டைப் போல் தொண்டை நாட்டிலும் பள்ளர் சமூகத்தார் பெற்ற சிறப்புத் தெரிகிறது என்று செங்குத்தர் வெற்றிப் பட்டயத்தைச் சான்று காட்டிக் கூறுவார். கல்வெட்டியல் அறிஞர் டாக்டர் செ.இராசு [62]. கி.பி 13ஆம் நூற்றாண்டு காலிங்கராயன் அணைப்பட்டயத்தில் கொங்கு நாட்டில் நிலையாகத் தங்கி வாழும் மக்களுள் பள்ளரும் குறிக்கப்படுகின்றனர். இவர்கள் வேளாண்மை செய்து வந்தனர்[63]. கன்னிவாடிப் பட்டயத்தில் பள்ள வேளாளர் அரசன் ஆதரவுடன் அதிகாரம் செலுத்தி வந்த விபரம் சொல்லப்பட்டுள்ளது. இங்கு குறிக்கப்படும் பள்ளபாளையம், பள்ளிபாளையம், பள்ளிப்பட்டி, பள்ளியரை நாடு என்ற கொங்குப் பெயர்களும் ஆய்வுக்குரியது என்பர் [64]. பாண்டிய மன்னன் குலசேகரனின் 34 ஆம் ஆட்சியாண்டில் கி.பி.13ம் நூற்றாண்டுக் கல்வெட்டில் கடுங்குளம் எனும் அணையை உடையாமல் காத்து "பெரிய தேவப்பள்ளர்" என்பார் இறந்துபட்டதாகவும் அவரின் செயலுக்கு உதிரப்பட்டி எனும் பெயரில் நிலம் அளித்ததும் குறிக்கப்பட்டிருக்கின்றது[65]. இங்கு தான் முதன் முதலில் நாயக்கர்கால பள்ளு நூல்களுக்கு முன்னால் பள்ளர் எனும் பெயர் காணப்படுவதாக அறிகிறோம். "புதுக்கோட்டைப் பகுதியில் கானாடு கோனாடு" எல்லைப் போரில் உயிர் கொடுத்து வாகை சூடிய அஞ்சுகரைக் குடும்பனார் அறுபது வீட்டார் பெற்ற காணியாட்சி குறித்து ஓலைப்பட்டயம் செய்தி தருகிறது [66]. இப்பட்டயம் கி.பி.1478ல் எழுதப்பட்டதாகும். இளமனூர்ச் செப்பேட்டில் பள்ளர்கள் இரகுநாத சேதுபதி காலத்தில் காடு கரை வெட்டிக் கண்மாய் வெட்டி மடைப் போக்கு உண்டாக்கி புதிய ஊரை உண்டாக்கி குடியேறியதாகக் குறிப்பிடுகின்றது[67]. இம்மக்கள் தமிழகம் முழுமையும் சிறப்புடன் வாழ்ந்து வந்தது குறித்து பல செப்பேடுகளும் கல்வெட்டுக்களும் காணப்படுவதாக கல்வெட்டியல் அறிஞர் செ.இராசு குறிப்பிடுவது இங்கு நினைக்கத்தக்கது [68] இதல்லாமல் இம்மக்களின் 1931 மற்றும் அதனையொட்டிய நிலக்கிரயப் பத்திரங்களிலும் தேவேந்திரகுல வேளாளர், பண்ணாடி எனும் பெயருடன் குறிக்கப்பட்டிருப்பதும் கருதத்தக்கது [69].

**இந்தியச் சுதந்திரப் போராட்ட வரலாறும்**
**தேவேந்திரர்களின் பங்கேற்பும்**

ஆங்கிலேயரை எதிர்த்து நடந்த சுதந்திரப் போரில் 1755 தொடங்கி 1947 வரை நடந்த இந்தியச் சுதந்திரப் போராட்டம் அனைத்திலும்

தேவேந்திர குல வேளாளர்கள் பங்கேற்று வீ ர மரணமடைநததும் பல்வேறு துனபங்களுக்கு ஆளாகியும் சிறை செனறும் இருபபதைக காணமுடிகின்றது.

தளபதி வெண்ணிக் காலாடிக் குடும்பனார் (1755)

1755ல் தெனனாட்டில் நெறகட்டான் செவ்வல் பாளையக்காரா பூலித்தேவன் முதன்முதலில் வெள்ளையரை எதிாததார். பூலித்தேவனின படைத் தளபதியாக இருநதவா தளபதி வெண்ணிக் காலாடிக் குடும்பன் ஆவார். இவா தேவேந்திர குல வேளாளர் இனத்தைச் சோந்தவா ஆவார். ஆங்கிலேயரின் படைத்தளபதி கானசாகிப்புடன் நடந்த போரில் வெண்ணிக் காலாடி வீ ர மரணமடைகின்றார். இவருககு நெற்கட்டான் செவ்வலில் நடுகல் உள்ளது [70]. இவரின் வீ ரம் குறித்து பூலித்தேவன் சிநதுவில் பல பாடல்கள் காணப்படுகின்றன. அவறறில் சில வரிகள வருமாறு.

"........ சின்னக் காலாடிக்கு மூத்தவன் பெரிய காலாடியடா"
சிறுத்தையைப் போலச் சீறிப்பாய்ந்தானடா
எத்தனை பட்டாளம் வெட்டினானடா
எதிர்க்கவும் ஒரு ஆள் கூட இல்லையடா
வெற்றிக் கொடி யேந்திய வீரனடா
.......... .............................. ....... [71]

நல்ல மாடன் (1767)

1767 இல் வாண்டையத் தேவனின் கொல்லங கொண்டான் கோட்டையைக் கர்னல் காம்பெல் என்ற ஆங்கிலேயன் முறறுகையிடட போது, அந்தப் போரில நலல மாடன எனற பள்ளன் வகுப்பைச சேர்ந்தவன். தனது சக இனத்தவர்களான பெரிய விரியன, சின்ன விரியன ஆகியோருடன் சென்று போரிட்டு வீரமரணமடைகின்றான. இவன் மாண்ட செயதி கேட்டு அவன் ஆததா மகன் மரணமடைந்த இடத்திலேயே மரணமடைகின்றாள. இன்றும் அந்த இடம் "நலலவன் ஆததாள் விழுநத செத்த இடம்" என்று அழைககப்படடு வருகின்றது [72].

தளபதி சுந்தரலிங்கக் குடும்பனார் (1799)

கட்டபொம்மன் வெள்ளையருடன போரிட்ட காலம் 1796 ஆகும். 5-9-1799 தேதியில தான் கட்டப் பொம்மன தூக்கிலிடப்படுகின்றார். ஆனால் கட்டப் பொமமுவுக்கு கூட இருந்த பலரும் துரோகம் செய்தனர். ஆனால கடைசி வரை நம்பிககைககு உரியவராக இருநது தன முறைபபெண வடிவுடன் வெள்ளையரின் வெடி மருந்துக் கிடஙகை மனித வெடிகுண்டாக மாறி அழித்தவா இந்தச் சுந்தரலிங்கனார். இவர் குறித்து

"கட்ட கருப்பணன் சுந்தரலிங்கம் என்றால் காலனும் நடுங்குவான்" என்று அக்காலத்தில் ஒரு வழக்காறு வழங்கியிருப்பதிலிருந்து இவர் வீ ரம் குறித்து அறியலாம். இவர் கட்டபொம்மனின் படையில ஒரு தளபதியாக விளங்கியவர் ஆவார். இவரைப பேரன்றே பல தேவேந்திரர்கள் சாதி ரீதியில் கட்டபொம்மனுடனும் ஊமத்துரையுடனும் சேர்ந்து போரிட்டதை பல நாட்டுப்புறக் கதைப்பாடல்கள் வரலாறாக ஆக்கியுள்ளன [73].

## குலசேகரப்பட்டிணம் மூப்பன் (1801)

1801 இல் மருது சகோதரர்களும் ஊமத்துரையும் சிறைபட்டபோது அவர்களுடன் குலசேகரபபட்டனம் மூப்பனும் சிறைப்பட்டான். இவரைச் சின்ன மருதுவின் மகனுடன் சேர்த்து 70 பேரை ஆங்கிலேயர் பிரின்ஸ் ஆப்வேல்சிற்கு நாடு கடத்தினர். இந்தக் குலசேகரப்பட்டணம் மூப்பன் தேவேந்திர குல வேளாளா இனத்தைச் சேர்ந்தவர். திருச்சி மாவட்டத்தில் தேவேந்திரர்களுக்கு மூப்பன் என்ற பட்டமும் உள்ளது [74].

## வெள்ளையனே வெளியேறு போராட்டத்தில் தேவேந்திரர்கள்

இந்தியச் சுதந்திரப் போராட்டம் மகாத்மா காந்தியின் தலைமையில் காங்கிரஸ் இயக்கத்தோடு இணைத்து நடத்தப்பட்டது. இக்காலத்தில் உப்புச் சத்தியாகிரகம், கள்ளுக்கடை மறியல், வெள்ளையனே வெளியேறு எனறவாறு பல்வேறு கிளர்ச்சிகளில் தமிழகம் முழுவதும் தேவேந்திர குல வேளாளர்கள் கலந்து கொண்டு சிறை சென்றுள்ளனர். அவர்களில் சிலர் குறித்து வருமாறு காணலாம்.

## வீராட்சி மங்கலம் காங்கிரஸ் பழனியாண்டி (1921)

தாராபுரம் வட்டாரம் வீராட்சி மங்கலத்தைச் சேர்ந்த காங்கிரஸ் மண்டலத் தலைவராக இருந்த காங்கிரஸ் பழனியாண்டி 1921ல் காங்கிரஸ் நடத்திய ஒத்துழையாமை இயக்கம் 1923ல் நடந்த சட்டமறுப்பு இயக்கம் 1930ல் நடந்த உப்புச் சத்தியாக்கிரகத்திலும் கலந்து கொண்டு சிறை சென்றுள்ளார். மகாத்மா காந்தி இவருக்கு தனிப்பட்ட முறையில் கடிதம் எழுதியிருக்கிறார். காமராஜர் இவரின் நெருங்கிய நண்பராகத திகழ்ந்தார். இவருடன் பீமன், நாலடியான், பூமிபாலகன், அண்ணாவி, நததககாட்டுப்பண்ணாடி ஆகிய இவ்வட்டாரத் தேவேந்திர குல வேளாளர் அடிக்கடி சுதந்திரப் போராட்டச் செயல்பாடுகளுக்காகச் சிறை சென்றதாகத் தெரிகிறது[75].

## கோவைப் பண்ணாடிமார்கள் (1942)

1942 ஆம் ஆண்டு வெள்ளையனே வெளியேறு சுதந்திரப்

போராட்டத்தின் ஒரு கட்டமாகக கோயமுததூர் சிங்காநல்லூருககும் போத்தனூருக்கும் இடையில் தண்டவாளஙகளுககும் இதர இரயில்வேக்கும் சொந்தமான சொததுக்களுககும் சேதம விளைவித்ததாக கோயமுத்தூர் தனி நீதிமன்றததில் தொடரபபட்ட வழககில தணடனை அடைந்த 43 பேர்களில் 17 பேர்கள் தேவேந்திர குல வேளாளர்கள என்றும் அவர்களின் பெயர்களையும டாக்டர் குருசாமி சித்தர் பட்டியலிடுவார் [76].

## புரட்சிப் பெரியார் வீரபத்திரன் (1942)

இவர் 1942ம் ஆண்டு மதுரை அமெரிககன் கல்லூரியில் பி.ஏ. படித்துக் கொண்டிருந்த போது மாணவர் போராட்டக குழுவிற்கு தலைமை தாங்கிச் சிறை சென்றவர். 16.7.1919ல் பிறநத இவர் தன்னை மாதிரியும "என் சுதந்திரமே உயிர் மூச்சு" எனப போராடிய பல தியாகிகள் அப்போது தேவேநதிர குல வேளாளர் சமூகத்தில் இருநதனர் என்றும் சில பெயர்களை வருமாறு குறிப்பிட்டார. தியாகி வெள்ளையானைக் குடும்பனார் (மேலப்பச்சேரி, மதுரை) தியாகி சுருளிக்காலாடி (நாராயணத் தேவனபட்டி, மதுரை மாவட்டம்) தியாகி பெரியாம்பிளை (வாடிப்பட்டி, மதுரை மாவட்டம்)[77].

## ஒளிமுத்து தேவேந்திரர் (1946)

பம்பாய் ஆங்கிலேயக் கப்பல் படையில் மாலுமியாகப் பணிபுரிந்த ஒளிமுத்து, நெல்லை மாவட்டம் இலந்தைக் கிராமத்தைச் சேர்ந்தவர். இவர் சர்தார் வல்லபாய் படேலின் தீவிர ஆதரவாளர். 1946 வரை சுதந்திரம் கிடைக்காததால் இந்தியாவில ஆங்காஙகே உளநாடடுக் கலவரம் நடந்தது. இதில் கப்பல் படையினரை பம்பாயில் கலகம் செயயத்தூண்டியதாகக் கைது செய்யப்பட்ட ஒளிமுத்து நீதிமன்றத்தில் மன்னிப்புக் கேட்காததால் பம்பாய் அருகில உளள யானைத் தீவு சிறையில் அடைக்கப்பட்டு இந்தியா சுதந்திரம் பெறும் வரையில சிறையிலிருந்து பின்பு விடுதலையானார் [78]. இவ்வாறு இநதியச் சுதந்திரப் போராட்டம் தொடஙகிய காலததிலிருநது பல தேவேந்திரர்கள் தமிழகம் முழுமையும் பல்வேறு போராட்டங்களில் சிறை சென்றுள்ளமை குறித்த ஆய்வு தனியே செய்யப்பட வேணடும. இவ்வரலாறு ஒடுக்கப்பட்ட மக்களின் சுதந்திரப் போராட்ட வரலாறாக அமையும்.

## தொகுப்புரை

தமிழில சாதி என்ற சொல் இல்லை. வடமொழியில் உள்ள ஜாதி எனும் சொல்லே தமிழில் சாதி என்ற சொலலாக அமைந்தது. சஙக காலத்தில் குடி, குலம் என்ற சொற்களாலேயே மக்கள் பிரிவு

அறியப்பட்டன. தமிழர்கள் சாதிப் பிரிவுகள் தொழிலடிப்படையில் அமைந்தது ஆகும். இத்தொழிலடிப்படையில் காணப்பட்ட குலங்களுக்குள் ஏற்பட்ட பிரிவுகளும் இக்குலப் பிரிவுகளுக்குள் ஏற்பட்ட இறுக்கமுமே பின்பு சாதிகளாக உருமாறியிருக்க வேண்டும்

சங்க இலக்கியங்களில் குறிக்கப்படும் மள்ளர் எனும் மருத நில மக்களே இன்று பள்ளர் தேவேந்திர குல வேளாளர்கள் என்று அறியப்படுகின்றனர். இதனை இன்றைய பள்ளு நூல்கள் பெரிய சான்றாய் அமைந்து உறுதி செய்கின்றன.

மள்ளர் இன மக்கள் வீரர்களாகவும் உழவர்களாகவும் அதே வேளையில் மருதநிலத்தில் முதன்முதலில் அரசைத் தோற்றுவித்து மூவேந்தர் மரபை நிறுவியர்களாகவும், இலக்கியச் சான்றுகளின் வழி காணப்படுகின்றனர்.

மருதநில மக்களின் தெய்வம் தேவேந்திரன் எனும் பெயரிலேயே இன்றும் இம்மக்கள் அறியப்படுவதை இலக்கியச் சான்றுகளும் இவர்களிடம் வழக்கிலுள்ள இவ்வினத் தோற்றக்கதைகளும் காட்டத் தவறவில்லை.

இம்மக்களின் முதன்மைத் தொழில் வேளாண்மை ஆகும். தமிழகத்தில் நன்செய் விவசாயத்தை குறிப்பாக நெல் வேளாண்மையைக் கொண்டு வந்தவர்கள் இவர்கள் என்பதை இவ்வியல் பல சான்றுகள் காட்டி நிறுவியுள்ளது.

நாயக்கர் ஆட்சிக் காலத்தில் தான் மன்னராய் இருந்த இவ்வினம் பள்ளராய் வீழ்த்தப்பட்டதை இவ்வியல் சுட்டிக் காட்டுகின்றது.

மல்லன் வழிபாடு இம்மக்களிடம் மட்டுமே காணப்பட்டு இவர்கள் வீர மரபினர் என்பதற்குச் சான்றாகின்றது.

மள்ளர், உழவர், கடையர், கடைசியர், ஆற்றுக் காலாட்டியர், களமர் ஆகிய பெயர்கள் இன்றும் இம்மக்களைச் சுட்டும் சொற்களாகவே காணப்படுகின்றன.

ஆரியக் கடவுளான இந்திரனுக்கும் மருதநிலக் கடவுளான வேந்தனுக்கும் (தேவேந்திரன்) யாதொரு தொடர்புமில்லை. இவ்வேந்தன் மருதநில மக்களின் முன்னோர் ஆவார் என்பதை இவ்வியல் விளக்கியுள்ளது.

இவர்களிடமிருந்து காரைக் காட்டு வேளாளர் என்பார் இவர்களுக்குரிய மேழியை அதாவது நிலத்தைப் பிடுங்கிக் கொண்டதற்கான குறிப்புக்கள் பள்ளு நூல்களில் காணப்படுகின்றன.

வரலாற்றுச் சான்றுகளில் குறிப்பாக கல்வெட்டு, செப்புப் பட்டயங்களில் இம்மக்களின் வரலாறு மேன்மையுடையதாகவே சித்தரிக்கப்படுகின்றன. காணியாட்சி பெற்ற தேவேந்திரர்கள் குறித்த பட்டயமும் கூட காணப்படுகின்றது. 2000 ஆண்டுக்கு முற்பட்ட கல்வட்டம் இம்மக்களுடன் தொடர்புடையதாக இருப்பதை இவ்வியல் சான்று காட்டி விளக்கியுள்ளது.

பிற்காலப் பாண்டியரில் வெட்டும் பெருமாள் பாண்டியன் இம்மக்களின் முன்னோராக இருந்து பாண்டிய மண்ணின் உரிமைக்காகப் போராடியுள்ளமை சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

இந்தியச் சுதந்திரப் போராட்டத்தில் இம்மக்கள் தொடக்ககாலத்திலி ருந்து இந்திய சுதந்திரப் போரில் பங்கேற்றிருப்பதை இவ்வியல் எடுத்துக் காட்டியுள்ளது.

## குறிப்புக்கள்

1. ஞானசேகரன், தே. சாதியின் தோற்றமும் வளர்ச்சியும், மள்ளர் மலர், - பிப்ரவரி - 1995.
2. தட்சிணாமூர்த்தி, அ. தமிழர் நாகரீகமும் பண்பாடும். ப - 530.
3. சாமி சிதம்பரனார், பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும். பக் - 88-90.
4. அழகு கிருஷ்ணன், பொ. சிலப்பதிகாரம் காட்டும் பண்பாடும் சமுதாயமும். ப - 3.
5. சாம்பசிவனார், ச.சிவனார் உரை நூல் தொல்காப்பியம் பொருளதிகாரம். ப 317.
6. மேலது ப.60
7. தேவநேயப் பாவாணர். ஒப்பியன் மொழி நூல். ப.44
8. ஞானசேகரன், தே. தேவேந்திர குல வேளாளர் வரலாறு (கட்டுரை) குருசாமி சித்தர் (ப.ஆ) தமிழர் பண்பாட்டு வரலாறு. பக் - 18 - 19
9. குருசாமிசித்தர், தமிழ் இலக்கியத்தில் பள்ளர். (மள்ளர்) தேவேந்திர குல வேளாளர்.
10. Hanumanthan, A.R. Untouchability of historical study. P. 100.
11. Oppert, G. The Original Inhabitants of India. P. 10.
12. தேவ ஆசிர்வாதம், இரா. பள்ளர் அல்ல மள்ளர். ப - 119.
13. மேலது ப - 118.
14. தேவநேயப் பாவாணர், ஒப்பியன் மொழி நூல். ப.44.

15. மேஜர். கதிர்மகாதேவன், Who are the sons of the soil (ஆங்கிலக் கட்டுரை) குருசாமி சித்தர் (ப.ஆ) தமிழர் பண்பாட்டு வரலாறு. ப.43.
16. சிவசண்முகம், சி. ஒலியியல் அடிப்படையில் மள்ளர் - பள்ளர் பெயர் மாற்றம் (கட்டுரை) குருசாமி சித்தர் (ப.ஆ.) மு.கா.ப. ப.16.
17. குருசாமி சித்தர். தமிழ் இலக்கியத்தில் பள்ளர் (மள்ளர்) தேவேந்திர குல வேளாளர்.
18. தேவ ஆசிர்வாதம், இரா. மூவேந்தர் யார்? வேளாளர் யார்? பள்ளர் அல்ல மள்ளர்.
19. ஞானசேகரன், தே. மு.கா.ப. ப - 20.
20. தட்சிணா மூர்த்தி, ஆ. தமிழர் நாகரீகமும் பண்பாடும். ப.60.
21. தேவ ஆசிர்வாதம், இரா. மூவேந்தர் யார்? ப.60
22. தேவ ஆசிர்வாதம், இரா. பள்ளர் அல்ல மள்ளர். ப.103
23. ஞானசேகரன், தே. மு.கா.ப. ப.22.
24. கைலாசபதி, க. பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும். ப.96.
25. மறைமலையடிகள், வேளாளர் நாகரீகம். ப.58.
26. அனுமந்தன், கே.ஆர். தேவேந்திரர்களை வீழ்த்துவதற்காக உருவாக்கப்பட்டதே நாயக்கர் ஆட்சியின் பாளையப்பட்டு முறை (ஆங்கில மூலம்) தமிழில் தங்கராஜ். பெ. பாட்டாளி முழக்கம், ஜீலை - 1993, ப.10.
27. மேலது ப-12.
28. குருசாமி சித்தர் (ப.ஆ.) தமிழக வரலாறும் தேவேந்திரர் வரலாறும் பிரிக்க முடியாதது (கட்டுரை) தமிழர் பண்பாட்டு வரலாறு. ப.86.
29. வேங்கடராமன், சு. பள்ளு இலக்கியங்களில் மள்ளர் மரபு. பக். 94-95.
30. தமிழ்ச்செல்வன், செ. நாயக்கர் ஆட்சியினால் வீழ்த்தப்பட்ட தேவேந்திரர்களின் வீர வரலாற்றுக் கதைப் பாடல் (கட்டுரை) குருசாமி சித்தர் (ப.ஆ.). மு.கா.ப. பக் 255-256.
31. தேவ ஆசிர்வாதம், இரா. பள்ளர் அல்ல மள்ளர். ப.116
32. தேவேந்திரர் தோற்றக் கதைகள் பின்னிணைப்பு. கதை எண் - 8.
33. மேலது - 10
34. மேலது - 9
35. மேலது - 7
36. மேலது - 5
37. மேலது - 3

38. மேலது - 1
39. மேலது - 2
40. மேலது - 4
41. மேலது - 6
42. பின்னிணைப்பு நலங்குப்பாடல் எண் - 2
43. தேவ ஆசிர்வாதம், இரா. மூவேந்தர் யார்?. ப.117
44. தின மணி, செப்டம்பர் 30, 1996 கோவை.
45. இராசையா, ந. மாமன்னன் பூலித்தேவன். ப-135.
46. இராசையா, நா. 6-1-99 தினமணி கோவை.
47. நாகசாமி, இரா. உயர்ந்தோர் பள்ளர், தினமலர் கோவை 23-10-98.
48. கருணாநிதி, மு. பாயும் புலி பண்டாரகவன்னியன். பக். 37-38.
49. வானமாமலை, நா. ஐவர்ராசாக்கள் கதை. ப. 2-3
50. குருசாமி சித்தன் (ப.ஆ.) பழனிப் பட்டயம் தமிழர் பண்பாட்டு வரலாறு. பக் 274-292.
51. தைப் பூச விழாவில் ஆயக்குடியிலுள்ள இடும்பன் கோயிலை வழிபட்ட பின்னர் தான் பழனி கோயில் வழிபாடு தொடங்கும் என்பது இது வரை உள்ள மரபு ஆகும்.
52. மேலது நத்தம் செப்புப் பட்டயம். பக் . 293-297.
53. கச்சியப்ப முனிவர், பேரூர்ப்புராணம், பள்ளுப் படலம்.
54. கோவைக்கிழார், திருப்பேரூர்ப்புராணம் ஆய்வுரை. ப-749.
55. கருப்புசாமி, வே. கொங்கு நாட்டுப் பாண்டிய மள்ளர்கள் ஒரு சமூக ஆய்வு (கட்டுரை) குருசாமிசித்தர் (ப.ஆ.) மு.கா.ப. பக். 188-197.
56. கந்தையா பிள்ளை, ந.சி. தென்னிந்தியக் குலங்களும் குடிகளும். ப.86.
57. பரமேஸ்வரி, சி. நாட்டுப்புறப் பாடல்களில் தேவேந்திரர்களின் வரலாறு. மள்ளர் மலர், ப-6 நவம்பர் - 1995.
58. மேலது
59. சிவசுப்பிரமணியன் கதைப் பாடல்களில் மள்ளர் வரலாறு அறக்கட்டளைச் சொற்பொழிவு, தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், கோவை 13-12-98.
60. சண்முக பாரதி, இமானுவேல் தேவேந்திரர் கதைப் பாடல் ஆய்வு ப.6.

61. மள்ளர் மலர், ஜூன் - 1998.
62. இராசு, செ. கொங்கு ஆவணங்களில் மள்ளர் சமூகம், மள்ளர் மலர், மார்ச் - 98. பக் - 15-17.
63. மேலது.
64. மேலது
65. இராசு, செ. அணை அடைத்த அருளாளர். மள்ளா மலர், நவம்பர் 1997 பக் 11-13.
66. இராசு, செ. அஞ்சு கரைக் குடும்பனார் அறுபது வீட்டார் பெற்ற காணியாட்சி. மள்ளர் மலர், ஜீன் 1998, ப. 3-4.
67. இராசு, செ. இளமனூர்ச் செப்பேடு. நேரில் சொன்ன தகவல் மற்றும் இச்செப்பேட்டின் ஒளி நகல் ஆதாரம்.
68. இராசு, செ. வரலாற்று ஆவணங்களில் மள்ளர் வரலாறு. அறக்கட்டளைச் சொற்பொழிவு. தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம். கோவை 13-9-98.
69. பின்னிணைப்பு, நிலக்கிரயப் பத்திரங்கள்
70. இராசையா, நா. மு.கா.ப. ப-135.
71. இராசையா, நா. விடுதலைப் போரில் தாழ்த்தப்பட்டோரின் பங்கு. ப-20.
72. மேலது பக் 49-50.
73. பரமேஸ்வரி, சி. இந்திய விடுதலைப் போரில் தேவேந்திரர்களின் பங்களிப்பு. குருசாமி சித்தர் (ப.ஆ.) தமிழர் பண்பாட்டு வரலாறு, ப - 69-70.
74. இராசையா, நா. மு.கா.ப. ப-57.
75. பாட்டாளிமுழக்கம், அக்டோபர் 1994, ப-20.
76. குருசாமி சித்தர், இந்திய சுதந்திரப் போராட்டத்தில் மள்ளர் எனும் தேவேந்திர குல வேளாளரின் பெரும் பங்கு. மள்ளர் மலர், அக்டோபர் 1997, பக். 6-7.
77. வீரபத்திரன் (80) தேவேந்திரர் குல வேளாளர் மேலக்கால், சோழவந்தான் வட்டாரம் மதுரை மாவட்டம்.
78. மருதமலர், ஜீன் - 1993, பக். 5-6.

இயல் - 2

# குலப்பிரிவுகளும் கூட்டமுறைகளும்

தேவேந்திர குல வேளாளர் இனத்தில் பல்வேறு உட்பிரிவுகள் காணப்படுகின்றன. அதே போன்று பல்வேறு குலப்பிரிவுகளும் கூட்ட முறைகளும் காணப்படுகின்றன. இம்மக்களிடம் பன்னீராயிரம் கோத்திரம் (குலம்) இருப்பதாகப் பழனிப்பட்டயம் குறிப்பிடுகிறது. இவ்வியல் இம்மக்களிடம் காணப்படும் குலப்பிரிவுகளையும், கூட்டமுறைகளையும் முறைப்படுத்தி விளக்க முற்படுகின்றது. மேலும் நாட்டின் அடிப்படையிலும், தெய்வங்களின் அடிப்படையிலும், செய்தொழிலின் அடிப்படையிலும், குலப்பட்டங்களின் அடிப்படையிலும், தனிமனிதப் பெயர்களின் அடிப்படையிலும் இம்மக்களிடம் வழங்கிவரும் பல்வேறு குலப் பிரிவுகளையும், அதனுள் காணப்படும் கூட்டமுறைகளையும் இவ்வியல் விரிவாக ஆராய்கின்றது.

## குலம் என்பதன் விளக்கம்

ஒரு குலத்தைச் சேர்ந்த அனைவரும் இரத்த வழி உறவுடையோர் ஆவர். அதாவது ஒரு முதாதையிடமிருந்து தோன்றியவர் என்பதால் இவர்களுக்குள் மணம் செய்வது கிடையாது. இவர்கள் தங்களுக்குள் பங்காளிகள் ஆவர். இவர்களுக்கென்று குல தெய்வம் (Clan God) தனியாக இருக்கும். தமிழ்ச் சமுதாயத்தில் வழங்கப்படும் கோத்திரம், பரம்பரை, வமிசம், வகையறா, பங்காளிகள் என்பதெல்லாம் குலங்களின் எச்சமாகும்[1]. ஆக குலம் என்பதை ஒரு பொது மூதாதையின் மரபு வழியில் தோன்றியதன் மூலம் ஒருவருக்கொருவர் சகோதரமுறையில் உறவு கொண்டவர்கள் என்று கருதலாம். இவ்வாறான குல அமைப்பு முறையை கூட்டம் என்றும் சொல்லுவர். காட்டாகக் காலாடி கூட்டம் என்று சொல்வது இங்கு நினைவு கூறத்தக்கது.

## கூட்டம் என்பதன் விளக்கம்

கூட்டம் என்பது ஒரு சமூகத்தின் அல்லது சாதியின் உட்பிரிவாகும். அதாவது ஒரு வழி மரபுக்குழுவாகும். ஒரு கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் ஒரே இரத்தக் கலப்புடையவர்களாக ஒரு வழி மரபுடையவர்களாகக் கருதப்படுகிறார்கள். ஒரு கூட்டத்தின் பெயர் குல தெய்வங்களின் பெயராகவும் (இடும்பன் வகையறா) செய்யும் தொழிலின் அடிப்படையிலும் (விசம் வாங்கிக் கூட்டம்) தனி மனிதப் பெயராகவும் (சித்தன் கூட்டம்) இடம் பெயர்ந்து வாழ்ந்த ஊர்ப் பெயராகவும் (வாலான் கோட்டையான்

கூட்டம், கோயிலாங்குலத்தான் கூட்டம்) இடம் பெயர்ந்து வாழும் நாட்டின் பெயராகவும், (மாறநாடு, கொங்குப் பள்ளனார், சோழியப் பள்ளனார்) அமையும். குலப்பெயர் அல்லது குடிப்பெயர் அம் மக்களின் உட்பிரிவுகளுக்கு ஆன கூட்டப் பெயராகவும், குலப் பெயராகவும் நிலைபேறடைகிறது எனலாம். சிலநேரங்களில் குலமும் கூட்டமும் ஒன்றையொன்று நெருங்கிய உறவுடையதாகக் காணப்படும்.

"இனத்தின் உட்பிரிவுதான் குலம், இதனை வடமொழியில் கோத்திரம் என்று சொல்லுவர். ஆங்கிலத்தில் "Clan" என்று பெயர் பெறும். ஒரே கூட்டத்தைச் சார்ந்தவர்கள் பங்காளி உறவுடையவர்களாகவும் சகோதர உறவுடையவராகவும் கருதப்படுகின்றனர். ஒரே கூட்டத்தினிரிடையில் திருமண உறவு வைத்துக் கொள்வதில்லை. ஒரு கூட்டத்தினரின் குலதெய்வம் இன்னொரு கூட்டத்தினரின் குலதெய்வம் ஆகாது. இக்குலதெய்வ அமைப்பு முறையில்தான் ஒரே குலதெய்வத்தை வழிபடுபவர்கள் பங்காளிகள் என்று அறியப்படுகின்றனர். இவ்வாறான குல அமைப்புகளை ஒரு சாதிக்குள் கண்டறிவதென்பது அவர்களது உறவு முறைகளைக் கண்டறிவதாகும். மனித குலத்தைப் பற்றிய மானிடவியலின் மகத்தான கண்டுபிடிப்புக்களுள் சமுதாயத்தின் கட்டமைப்பிற்குள் செயல்படும் மரபுமுறை (Descent System) உறவு முறை (Kinship) பற்றிய விதிகளைக் கண்டு பிடித்ததும் ஒன்றாகும். ஒவ்வொரு சமுதாயத்திலும் மக்கள் ஏராளமான எண்ணிக்கையில் வாழ்ந்தாலும் அவர்கள் ஏதோ சில விதிகளின் அடிப்படையில் பிணைப்புக்களை ஏற்படுத்திக் கொண்டு குலம், கோத்திரம், கால்வழி, மரபுக்குழு (Decent Group) போன்ற பல சிறு குழுக்களாகப் பிரிந்து செயல்படுகின்றனர். இக்குழுக்களுக்குள்ளேயும் சிலர் மிக நெருக்கமானவர்களாகவும், சிலர் மட்டுமே வாழ்க்கைத் துணைக்கு ஏற்றவர்களாகவும் உள்ளனர். இவை போன்ற எண்ணற்ற விதிகள் ஒவ்வொரு குழுவிற்குள்ளேயும் செயல்படுகின்றனர். இவ்விதிகள் உலகம் முழுவதும் வாழும் மக்களிடையே ஒரே தன்மையாக இல்லை. நூற்றுக்கணக்கான வேறுபாடுகளுடன் காணப்படுகின்றன"[2]. இக்கருத்துப்படியே தமிழகத்தில் வாழும் தேவேந்திரர்களும் ஆயிரத்துக்கும் மேற்பட்ட குலப் பிரிவுகளாக வாழ்ந்து வருகின்றனர் என்று அறிய முடிகிறது. இம் மக்கள் கொண்டுள்ள குலப்பிரிவுகள் பெரும்பாலும் அவர்கள் வழிபடும் குலதெய்வத்தை வைத்தே கணிக்கப்படுகின்றன. இருப்பினும் இம்மக்களிடம் காணப்படும் கூட்டப்பிரிவுகளின் எண்ணிக்கை இம் மக்களின் இம் மண்ணுடனான தொன்மையான பிணைப்பினையும் வரலாற்றையும் உள்ளடக்கியதாக காணப்படுகின்றன. தமிழகம் முழுவதும் பரவி வாழும் இம்மக்கள் பள்ளன், தேவேந்திர குலத்தார், கடைஞன், காலாடி, குடும்பன், பண்ணாடி, பலகன், மூப்பன் என்ற பல பிரிவுகளில்

அழைக்கப்பட்டாலும் இன்று தேவேந்திர குல வேளாளர் என்று ஒரே இன உணர்வுடன் எழுச்சி பெற்று தாங்கள் ஒரு மூதாதையின் வழி வந்தவர்களாக அதாவது மருதநில வேந்தனின் மக்கள் என்றே கருதுகின்றனர்.

## திருமணமும் கூட்ட முறையும்

"இந்தியச் சூழலில் குறிப்பிட வேண்டுமானால் சாதி ஓர் அகமணக் குழுவாகும். ஒரு சாதியைச் சேர்ந்தவர்கள் அவர் தம் சாதிக்குள் மட்டும் தான் திருமணம் செய்து கொள்கின்றனர். வேற்றுச் சாதியினரோடு பெரும்பாலும் திருமணம் செய்து கொள்வதில்லை இந்நிலையில் அமையும் திருமணமே அகமணம் எனக் கூறப்படும்"[3]. என்பார் மானிடவியல் அறிஞர் சீ. பக்தவச்சலபாரதி. ஆனால் தமிழகத்தில் ஒரு சாதிக்குள் ஒரே கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் தங்கள் கூட்டத்திற்குள் திருமணம் செய்யாது வேறு கூட்டத்தில் திருமணம் செய்வதைத்தான் புறமணம் (exogamy) என்கின்றனர். இங்கு சகோதர மணம் (endogamy) என்பது ஒரு கூட்டத்திற்குள் அல்லது தனது குலத்திற்குள் திருமணம் செய்வதைக் குறிக்கும். ஆக இவ்வழக்கம் இம்மக்களிடம் இல்லை. இம் மக்களிடம் ஒரு குலம் அகக்குழுவாகவும் வேறு கூட்டம் புறக் குழுவாகவும் கருதப்படுகின்றன. காட்டாக கடையர் பிரிவு ஒரு குலம், அதாவது தேவேந்திரர்களில் ஒரு சாதிப்பிரிவு அதனுள் இருக்கும் பல்வேறு கூட்டங்கள் தனித்தனிப் புறக்குழுவாகும். ஒவ்வொரு கூட்டமும் தனக்கென தனியான ஒரு வழிபாட்டையும் பெயரையும் கொண்டிருக்கும். இம்மக்களிடம் காணப்படும் குலப் பிரிவுகள் மட்டும் ஆயிரத்திற்கும் மேல் இருப்பதாகத் தெரிகின்றன. இதே போன்று ஒவ்வொரு குலத்திற்குள் இருக்கும் கூட்டம் ஆயிரங்களின் பல மடங்காகக் காணப்படுகின்றன. இம் மக்கள் இதுவரை தங்களின் குலத்திற்குள் இருக்கும் உட்பிரிவுகளுக்குள் தான் திருமணம் செய்து கொள்வர். காட்டாக அம்மா பள்ளர் அதே அம்மா பள்ளர் பிரிவில் வேறு கூட்டத்தில் திருமணம் செய்வது மரபாக இருந்து வந்துள்ளது. இப்பொழுது இந்நிலைமாறி அம்மாப் பள்ளர், ஆத்தாப் பள்ளருடனோ அல்லது சோழியப் பள்ளர், கொங்குப் பள்ளருடனோ திருமணம் செய்து கொள்ளும் வழக்கம் அண்மைக்காலத்தில் ஏற்பட்டு வருகின்றது.

## கூட்டமுறையும் சகோதரத்துவமும்

திருமண உறவுகளைத் தீர்மானிப்பதில் குலமும் கூட்டமுறைகளும் பங்காற்றுவது போன்று சமூகத்தில் ஒற்றுமையை வளர்ப்பதிலும் இம்முறை பயன்படுகின்றது. ஒரு கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் குருதி உறவுடையவராகக் கருதப்படுவதால் உடன் பங்காளிகள் என்று தங்களை அழைத்துக்

கொள்கின்றனர். தங்களது குல தெய்வம் அல்லது கூட்டத்தின் பெயரை அறிந்து ஒன்று சேரும் வழக்கம் இன்றும் இவர்களிடம் வலுவாகக் காணப்படுகின்றது. இதனை இம்மக்களின் குல தெய்வ வழிபாட்டில் காணலாம். குலதெய்வவழிபாட்டின் போது அனைத்துப் பங்காளிகளும் ஒரே மூதாதையரின் வழிவந்தவர்கள் எனும் நோக்கில் ஒன்று சேர்ந்து செயல்படுவதைக் கூட்ட முறையின் சமூகச் செயல்பாடு எனலாம். ஒரு கிராமத்தில் ஒரு கூட்டம் கிளை விட்டு பல கூட்டங்களாகப் பிரிவதை வருமாறு காணலாம்.

## ஒரு கிராமம் - கூட்ட வகைகள்

இங்கே குலப்பிரிவையும் அதனுள் ஏற்படும் கூட்ட வகைகளையும் புரிந்து கொள்வதற்காக மதுரை மாவட்டம் உசிலம்பட்டி வட்டாரத்திலுள்ள போலிபட்டி கிராமத்தில் வாழும் மாற நாட்டுப்பள்ளர் பிரிவைச் சேர்ந்த குலப்பிரிவில் ஐந்து மக்கள் பிறந்து ஐந்து பேரும் ஐந்து கூட்டங்களாகப் பிரிந்து வாழ்கின்றனர். இந்த ஐந்து கூட்டமும் தனித்தனியாகக் கூட்டப் பெயரையும் குல தெய்வத்தையும் கொண்டுள்ளன. அவை வருமாறு அமையும்.

| கூட்டப்பெயர் | குலதெய்வப் பெயர் |
|---|---|
| 1) கோடாங்கி கூட்டம் | கருப்புச்சாமி |
| 2) ஏழுபேர் கூட்டம் | பெரியகருப்பு |
| 3) ஐயனன் கூட்டம் | சின்னக்கருப்பு |
| 4) காலாடி கூட்டம் | ராக்காச்சியம்மா |
| 5) ஆண்டி கூட்டம் | ஆண்டிச்சாமி |

இங்கு குறிக்கப்படும் ஐந்து கூட்டத்தினரும் தங்களது முன்னோரை நினைவில் வைத்திருப்பதால் தங்களைச் சகோதர உறவு முறையினர் என்றும் தங்களுக்குள் திருமண உறவு வைக்க மாட்டோம் என்று சொல்கின்றனர். இவர்கள் திண்டுக்கல் மாவட்டம் செம்பட்டியில் வாழும் தவசிகூட்டம், கிழவன் கூட்டத்துடன் திருமண உறவு வைத்துக் கொள்கின்றனர். இக் கூட்டத்தினரின் குல தெய்வம் பேத்தரசுஅம்மன் ஆகும்.

## தேவேந்திரர்களின் இனப்பிரிவுகளும் குலப்பட்டங்களும்

தேவேந்திரர்களின் சமூகம் குறித்து வழங்கும் "பள்ளர் சாதி பல சாதி", "நெல்லு வகையை எண்ணினாலும் பள்ளு வகையை எண்ண முடியாது" போன்ற வழக்காறுகள் தேவேந்திரர்களின் பல்வேறு

குலப்பிரிவுகளைக் குறிப்பதாகும். தேவேந்திரர் குலத்தில் பல்வேறு உட்பிரிவுகள் உள்ளன. அதே போன்று பல்வேறு குலப் பட்டங்களையும் தரித்துள்ளனர். இதனை வருமாறு காணலாம். அரசு வெளியிட்டுள்ள அட்டவணைச் சாதியினர் (Scheduled Castes) பட்டியலில் தேவேந்திரர்கள் ஆறு இனப்பிரிவினராக அறியப்பட்டுள்ளனர். அவை

| | | |
|---|---|---|
| 1) பள்ளன் | இணைப்பு II | (1) (4) |
| 2) தேவேந்திரகுலத்தார் | " | (2) (4) |
| 3) கடைஞன் | " | (2) (22) |
| 4) காலாடி | " | (2) (23) |
| 5) குடும்பன் | " | (2) (26) |
| 6) பண்ணாடி | " | (4) [4] |

இங்கு குறிக்கப்பட்ட ஆறு பிரிவுகள் தமிழகம் முழுவதும் காணப்படுவதாகும். இவற்றிற்குள்ளும், சில உட்பிரிவுகளும் நாடுவாரியாகக் குலப் பட்டங்களும் வருமாறு வழங்குகின்றன.

| நாடு | பிரிவுகள் | குலப்பட்டம் |
|---|---|---|
| 1) பாண்டிய நாடு | அம்மா | நெல்லை மாவட்டம் |
| | அஞ்ஞா | குடும்பன் |
| | அய்யா | மதுரை மாவட்டம் |
| | ஆத்தா | காலாடி, குடும்பன் |
| | கடைஞன் | தேவேந்திரன், பாண்டியன் |
| 2) சோழ நாடு | கடைஞன் | காலாடி |
| | காலாடி | தொண்டைமான் |
| | பணிக்கன் | மூப்பன் |
| | மூப்பன் | வாய்க்காரன் |
| | வாய்க்காரன் | |
| 3) சேர நாடு (கொங்குப் பகுதி) | கடைஞன் | குடும்பன் |
| | கொங்கன் | பட்டக்காரன் |
| | சோழியன் | பண்ணாடி |
| | பாண்டியன் | பலகன், மண்ணாடி, மூப்பன் [5] |

**உட்பிரிவுகள்**

பாண்டிய நாடு, சோழ நாடு, சேர நாடு (கொங்குப் பகுதி) ஆகியவற்றுள் மேலும் சில உட்பிரிவுகள் இருப்பதாகத் தெரிகிறது.

| நாடு | பிரிவுகள் | உட்பிரிவுகள் |
|---|---|---|
| 1) நெல்லை | அம்மா | கொடைநாட்டார் |
| | | சிவந்திநாட்டார் |
| | அஞ்ஞா | சிக்கநாட்டார் |
| | | செளுவ நாட்டார் |
| | ஆத்தா | வீரநாட்டார் |
| | | பருத்திக் கோட்டை |
| | நாட்டார் | |
| 2) மதுரை | அம்மா | மங்கலநாட்டார் |
| | அஞ்ஞா | ஈசநாட்டார் |
| | ஆத்தா | |
| 3)சேர நாடு | அம்மா | சோழியன், பாண்டியன் |
| (கொங்குப் பகுதி) | அஞ்ஞா | கடைஞன் |
| | ஆத்தா | கொங்கன் |

இங்கு பெற்றோர்களை அம்மா, அஞ்ஞா, அய்யா, ஆத்தா என்று அழைக்கும் முறையில் கூட இவர்களின் இனப்பிரிவாகக் கருதப்படுவது குறிக்கத்தக்கது. இதுவல்லாமல் புதுக்கோட்டைப் பகுதியில் வாழ்பவர்கள் வடசிறுவாசல் நாட்டார், தென்சிறுவாசல் நாட்டார், குல மாங்கல்ய நாட்டார், கவி நாட்டார், பரங்கி நாட்டார், கோனாட்டார், கானாட்டார் என ஏழு பிரிவுகளாக இருப்பதாக இரா. தேவ ஆசிர்வாதம் குறிப்பிடுவார்[6]. இம்மக்களின் குலத்தில் 72 வகை உட்பிரிவுகள் இருப்பதாக டாக்டர் குருசாமி சித்தன் கண்டறிந்துள்ளார் அவை வருமாறு.

1. அஞ்ஞாப்பள்ளர்
2. அணியப்பள்ளர்
3. அம்மாப்பள்ளர்
4. அய்யாப்பள்ளர்
5. அரசப்பள்ளர்
6. ஆத்தாப்பள்ளர்
7. ஆற்றுக்காலாட்டியர்
8. இந்திர சாதி
9. இந்திரன்
10. உழத்தியர்
11. உழவர்
12. ஊரன்
13. கடைசியர்
14. கடைஞர்
15. கடையர்
16. கடையன்
17. கம்பளர்
18. களமர்
19. களத்துப் பள்ளனார்
20. காலாடி
21. கிழவன்
22. கிழத்தி
23. கிழார்
24. கிழான்

25. குடியானவன்
26. குடும்பனார்
27. குடும்பன்
28. கூத்தர்
29. கூத்தாடி
30. கூத்தனார்
31. கூத்தன்
32. கொங்குப்பள்ளர்
33. சேரப்பள்ளனார்
34. சோழியன்
35. சோழியப்பள்ளர்
36. திருமால் (செல்வமிக்க மல்லர்)
37. தேவேந்திர குல வேளாளர்
38. தேவேந்திரப்பள்ளனார்
39. தேவேந்திர வேளாளர்
40. தேவேந்திரர்
41. தேவப்பள்ளனார்
42. தொண்டைமான்
43. நீர்க்கட்டி
44. பட்டக்காரர்
45. பணிக்கன்
46. பண்ணாடி (பண்ணாட்டுச் செய்பவர்)
47. பலகன்
48. பள்ளத்தியார்
49. பள்ளர்
50. பள்ளனார்
51. பாண்டியப் பள்ளனார்
52. பாண்டியர்
53. புரந்திரன்குலத்தார்
54. பெருமாள்
55. மகிழ்நன்
56. மண்ணாடி
57. மம்பட்டிக்காரன்
58. மல்லர்
59. மல்லனார்
60. மல்லாடி
61. மல்லாண்டை
62. மல்லத்தியார்
63. மள்ளர்
64. மள்ளனார்
65. மால்
66. மும் முடிப்பள்ளனார்
67. மூப்பன்
68. மூப்பனார்
69. வாய்க்காரன்
70. வெள்ளாளர்
71. வேளார்
72. வேளாளர்[7]

இவற்றில் சில பெரு வழக்காகவும் இருக்கின்றன. சில அருகிய வழக்காகவும் இருக்கின்றன. இதே போன்று பழனிச் செப்புப் பட்டயமும், நத்தம் செப்புப் பட்டயமும் இம்மக்களின் குலப் பிரிவுகள் குறித்துத் தனித்தனியே இரண்டு பட்டியலைக் குறிப்பிடுகின்றன. இவற்றில் பழனிப் பட்டயத்தில் 84 பிரிவுகளும் நத்தம் பட்டயத்தில் 73 பிரிவுகளும் காணப்படுகின்றன. இவை இரண்டிலும் சேர்ந்து தனித்தனிக் குலப்பிரிவுகளாக சுமார் 157 பிரிவுகள் இருப்பதை அகர வரிசைப் படுத்தி வருமாறு காணலாம்[8].

இரண்டு பட்டயங்களிலும் குறிக்கப்பட்ட பிரிவுகள் கூட்டல் அடையாளமிட்டுக் காட்டப்பட்டுள்ளன.

1. அந்தியூர்ப் பள்ளர் (ப.ப)
2. அரப்புப் பள்ளர் (ந.ப)
3. அன்னியப் பள்ளன் (ந.ப)
4. அகத்த நாட்டு பள்ளர் (ப.ப)
5. அம்பு நாட்டுப் பள்ளர் (ந.ப)
6. அரச பள்ளர் (ப.ப)
7. அன்னிய பள்ளர்க்கு மண் பள்ளர் (ப.ப)
8. அக்கரை கண்ட பள்ளர் (ப.ப)
9. அழவு கையிட்ட பள்ளர் (ந.ப) + (ப.ப)
10. ஆரூர்ப் பள்ளன் (ந.ப)
11. ஆனைகட்டி பள்ளர் (ப.ப)
12. ஆயா பள்ளர் (ப.ப)
13. ஆமண பள்ளர் (ப.ப)
14. ஆத்தா பள்ளன் (ந.ப)
15. ஆனையூர் பள்ளன் (ந.ப) + (ப.ப)
16. ஆத்தாய பள்ளர் (ப.ப)
17. ஆதியூர் பள்ளர் (ப.ப)
18. இளம் பிறை பள்ளர் (ப.ப)
19. இப்புரை பள்ளர் (ப.ப)
20. இசைய பள்ளர் (ப.ப)
21. ஈஸ்வரப் பள்ளன் (ந.ப)
22. ஒண்டிப்புலிப் பள்ளன் (ந.ப)
23. ஒமந்திரப் பள்ளன் (ந.ப)
24. கட்டியப் பள்ளர் (ந.ப)
25. கல்லுக்கட்டிப் பள்ளன் (ந.ப)
26. கடத்தலைப் பள்ளன் (ந.ப)
27. கவுண பள்ளர் (ப.ப)
28. கடைய பள்ளர் (ப.ப)
29. கப்பரை பள்ளர் (ப.ப)
30. கட்டயப் பள்ளன் (ந.ப)
31. காதுவ பள்ளர் (ப.ப)
32. காட்டானை வென்ற பள்ளர் (ப.ப)

33. கிழிஞ்சி பள்ளர் (ப.ப)
34. குமுணமுறங் கொத்தி பள்ளன் (ப.ப)
35. குங்கும பள்ளர் (ப.ப)
36. குமிர்த பள்ளன் (ந.ப)
37. குதிரைக்கு மாரடித்த பள்ளன் (ந.ப)
38. குளத்துப் பள்ளன் (ந.ப)
39. கூனங்குடி பள்ளர் (ப.ப)
40. கூத்தாடிப் பள்ளர் (ந.ப)
41. கொனுதையும் பள்ளர் (ப.ப)
42. கொலைகளவு வென்ற பள்ளர் (ப.ப)
43. கொங்க பள்ளன் (ந.ப) + (ப.ப)
44. கோனாகப் பூச்சி தின்னும் பள்ளன் (ந.ப)
45. சங்கரப்பள்ளன் (ந.ப)
46. சானாட்டுப் பள்ளர் (ப.ப)
47. சாமண பள்ளர் (ப.ப)
48. சாய பள்ளர்கவிதமான பள்ளர் (ப.ப)
49. சுந்தரப் பள்ளன் (ந.ப)
50. சுவந்திரப் பள்ளன் (ந.ப)
51. சுழி கனியா பள்ளர் (ப.ப)
52. சின்னிய பள்ளன் (ப.ப) + (ந.ப)
53. செலுவப் பள்ளன் (ந.ப)
54. சொட்டையப் பள்ளன் (ந.ப)
55. சோனாட்டுப் பள்ளன் (ந.ப)
56. சோனாகப் பள்ளன் (ந.ப)
57. சோதிரப் பள்ளன் (ந.ப)
58. சோழியப் பள்ளன் (ந.ப)
59. தவமுடிப்பள்ளர் (ந.ப)
60. தத்துவப் பள்ளன் (ந.ப)
61. தவளைப் பள்ளர் (ப.ப)
62. திருமுடிப் பள்ளர் (ந.ப)
63. திருநாமப்பள்ளர் (ப.ப) + (ந.ப)
64. துரையெறி பள்ளர் (ப.ப) + (ந.ப)
65. துட்டுஷ பள்ளர் (ப.ப)
66. துலுக்கப்பள்ளர் (ப.ப)

67. தெய்வேந்திர பள்ளன் (ப.ப) + (ந.ப)
68. தொண்ட மண்டல பள்ளர் (ப.ப) + (ந.ப)
69. தொட்டியப் பள்ளர் (ப.ப) + (ந.ப)
70. தொல்லை மாலை விலை கூறும் பள்ளர் (ப.ப)
71. நட்டுவப் பள்ளன் (ந.ப)
72. நாக நாட்டுப் பள்ளர் (ப.ப)
73. நாக மழித்த பள்ளர் (ப.ப)
74. பந்தலடிப்பள்ளன் (ந.ப)
75. பழிவிக்கும் பள்ளர் (ப.ப)
76. பனங்குடிப்பள்ளன் (ந.ப)
77. பச்சைப் பள்ளர் (ப.ப) + (ந.ப)
78. பன்னாகப் பள்ளன் (ந.ப)
79. பட்டணக்கரை பள்ளர் (ப.ப)
80. பண்டாரப் பள்ளன் (ந.ப)
81. பாண்டியப் பள்ளன் (ப.ப)
82. பாங்கி கூட்டம் (ப.ப)
83. பாப்புப் பள்ளன் (ந.ப) + (ப.ப)
84. பாம்பாட்டிப் பள்ளன் (ந.ப)
85. பாவை கட்டிப்பள்ளன் (ந.ப) + (ப.ப)
86. பாசி கட்டிப் பள்ளன் (ந.ப)
87. பாணங்குடி பள்ளர் (ப.ப)
88. பூரண பள்ளர் (ப.ப)
89. பூசற பள்ளர் (ப.ப)
90. பூலாங்குளத்துப் பள்ளர் (ப.ப)
91. பென்னி பள்ளர் (ப.ப) + (ந.ப)
92. பொதினி பள்ளர் (ப.ப)
93. மங்க நாட்டுப் பள்ளர் (ப.ப) + (ந.ப)
94. மந்தயப் பள்ளன் (ந.ப)
95. மருதப் பள்ளன் (ந.ப)
96. மங்கு மிளப் பள்ளன் (ந.ப)
97. மடையப் பள்ளன் (ந.ப)
98. மல்லுக் கட்டிப் பள்ளன் (ந.ப)
99. மா நாட்டுப் பள்ளர் (ப.ப) + (ந.ப)
100. மீசற் பள்ளர் (ப.ப)

101. மூக்கு விசைய பள்ளர் (ப.ப)
102. மேனாட்டுப் பள்ளர் (ப.ப) + (ந.ப)
103. மேல்மடை கட்டி பள்ளர் (ப.ப)
104. மொறம் கொத்தி பள்ளர் (ந.ப)
105. மொட்டயப் பள்ளன் (ந.ப)
106. யாப்பு பள்ளர் (ப.ப)
107. யாறுழ பள்ளர் (ப.ப)
108. ஏயடி பள்ளன் (ந.ப)
109. வஞ்சுனி பள்ளர் (ப.ப)
110. வடுகப் பள்ளர் (ப.ப) + (ந.ப)
111. வடம் பள்ளர் (ப.ப)
112. வடு படுத்திக் கொள்ளும் பள்ளர் (ப.ப)
113. வங்கள பள்ளர் (ப.ப)
114. வடுப்படாப் பள்ளன் (ந.ப)
115. வடுபடுத்திய பள்ளன் (ந.ப)
116. வன்னியப் பள்ளன் (ந.ப)
117. வடமலைப்பள்ளன் (ந.ப)
118. வனங்கா முடிப்பள்ளன் (ந.ப)
119. வாணங்கட்டி பள்ளர் (ப.ப)
120. விதண பள்ளர் (ப.ப)
121. விதலை சயா பள்ளர் (ப.ப)
122. வீரியப் பள்ளர் (ப.ப) + (ந.ப)
123. வெங்கல நாட்டுப் பள்ளன் (ந.ப) + (ப.ப)
125. வெண்டிப் பள்ளர் (ப.ப)
126. வெட்டைப் பள்ளர் (ப.ப)
127. வேப்பம் குளத்துப் பள்ளர் (ப.ப) + (ந.ப)
128. வேண்டிய பள்ளன் (ந.ப)
129. வேலூர் பள்ளன் (ந.ப)
130. வேட்டைப் பள்ளன் (ந.ப)

## தேவேந்திரர்களும் நாட்டுப் பிரிவுகளும்

தேவேந்திர இன மக்களை அவர்கள் வாழும் நாட்டின் பெயருடன் சேர்த்து அழைக்கும் வழக்கம் காணப்படுகின்றது. இன்றளவும் இவர்கள் நாட்டுப் பிரிவும், குலப் பிரிவுகளையும் சொல்லி தங்களை இனங்காட்டிக்

கொள்வதைக் காணமுடிகிறது. நத்தம் செப்புப் பட்டயத்திலும் பழனிப்பட்டயத்திலும் குறிக்கப்படும் தேவேந்திரர்களின் நாடுகள் வருமாறு.

1. கொங்குப்பள்ளர் (ந.ப)
2. வெங்கல நாட்டுப் பள்ளர் (ந.ப)
3. அகத்த நாட்டுப் பள்ளர் (ப.ப)
4. அம்பு நாட்டுப் பள்ளர் (ந.ப)
5. அந்தி நாட்டுப் பள்ளர் (ந.ப)
6. சோணாட்டுப் பள்ளர் (ந.ப)
7. சோழியப் பள்ளர் (ப.ப)
8. தொண்டை மண்டலப் பள்ளர் (ப.ப)

இங்கு இடம் பெறாத சில நாட்டுப் பெயர்களை டாக்டர் குருசாமி சித்தன் வருமாறு குறிப்பிடுவார்.

1. ஈச நாட்டுப் பள்ளர்
2. ஏழுநாட்டுப் பள்ளர்
3. கவி நாட்டுப் பள்ளர்
4. காணாட்டுப் பள்ளர்
5. குலமாங்கல்யநாட்டுப் பள்ளனார்
6. கொடை நாட்டுப் பள்ளனார்
7. சிக்க நாட்டுப் பள்ளனார்
7. செளுவ நாட்டுப் பள்ளனார்
9. சிவந்தி நாட்டுப் பள்ளனார்
10. தென் சிறுவாசல் பள்ளனார்
11. சேரநாட்டுப் பள்ளனார்
12. பருத்திக் கோட்டை நாட்டுப் பள்ளனார்
13. பாண்டிய நாட்டுப் பள்ளனார்
14. வட சிறுவாசல் நாட்டுப் பள்ளனார்
15. வீரவள நாட்டுப் பள்ளனார். [9]

ஆக பழனிப்பட்டயம் மற்றும் நத்தம் செப்புப் பட்டயத்தில் குறிக்கப்படும் 8 நாடுகளும், இதல்லாமல் டாக்டர் குருசாமி சித்தன் குறிப்பிடும் 16 நாடுகளும் கள ஆய்வில் கண்டறியப்பட்ட மாறநாட்டுப் பள்ளர் எனும் பிரிவையும் சேர்த்து நாட்டின் அடிப்படையில் 25 நாடுகள் இம்மக்களின் இனத்துடன் தொடர்புபடுத்திச் சொல்லப்படுவதை அறிய முடிகின்றன.

இவ்வாறு நாட்டின் அடிப்படையிலும் செய்தொழிலின் அடிப்படையிலும், பட்டயங்களின் அடிப்படையிலும், வாழ்விடங்களின் அடிப்படையிலும், தனி மனிதப் பெயர்களின் அடிப்படையிலும் குறிக்கப்படும் தேவேந்திர குல வேளாளர்களின் பல்வேறு குலப் பெயர்கள், கூட்டப் பெயர்கள் தோற்றம் குறித்து வருமாறு சுருக்கமாகக் காணலாம்.

## குலப்பட்டங்களின் அடிப்படையில் அமைந்த கூட்டங்கள்

இம் மக்களிடம் செய் தொழிலின் அடிப்படையிலும், ஊர் நிர்வாகங்களின் அடிப்படையிலும் பல்வேறு சிறப்புகளின் அடிப்படையிலும் குலப் பட்டங்கள் காணப்படுகின்றன. அவைகளில் சில குடும்பன், காலாடி, மூப்பன், பண்ணாடி, பட்டக்காரர், வாரியன், மண்ணாடி, பலகன் என்பதாகும். இவற்றை வருமாறு தனித்தனியே விளக்கமாகக் காணலாம்.

## குடும்பன் (குடும்பனார்)

தேவேந்திரர்களுக்கு குடும்பனார் என்பது குலப்பட்டமாக வழக்கில் இருக்கின்றது. திருநெல்வேலி, மதுரை, திண்டுக்கல் மாவட்டங்களில் தேவேந்திரர்கள் தங்களைக் குடும்பனார் என்று அழைத்துக் கொள்கின்றனர். இன்றைய வழக்கில் குடும்பனார் என்பது ஊர்த் தலைவரைக் குறிக்கும் பட்டமாக அமைகின்றது. பள்ளு இலக்கியங்களில் இடம் பெறும் தலைமை மாந்தர் குடும்பன் என்றே அழைக்கப்படுகின்றார்.

"ஆருக்கும் பணியான்
குடும்பு செய்து ஊராருக்கு உழைப்பான்"
(மு.கூ.ப. - 88)

இங்கு குறிக்கப்பட்ட குடும்பு என்ற சொல் ஊராருக்கு நல்லது செய்யும் தலைமைப் பதவியைக் குறிக்கும்.

"பள்ளு இலக்கியங்கள் தோன்றுவதற்கு முன்னபே பிற்காலச் சோழராட்சியில் குடும்பு என்ற சொல் வழக்கிலிருந்ததாகத் தெரிகிறது. சோழர் ஆட்சிக் காலத்தில் மிகவும் சிறப்புப் பெற்று விளங்கிய கிராம ஆட்சி முறை கிராம மக்களுக்கு முழுச் சுதந்திரம் அளிக்கும் வகையில் அமைந்திருந்தது. கிராம ஆட்சியின் முக்கிய அமைப்புக்களாக விளங்கியவை ஊர், சபை எனும் அமைப்புக்களாகும். இச்சபை அமைப்பில் பல வாரியங்கள் இருந்தன. இதில் ஏரி வாரியம், ஏரி, குளம், ஊருணி போன்ற நீர் நிலைகளைப் பாதுகாத்தது. இது போன்றே கணக்கு வாரியம், கலிங்கு வாரியம், குடும்பு வாரியம் போன்றனவும் செயல்பட்டன" [10].

"ஒவ்வொரு கிராமமும் பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டன. ஒவ்வொரு பகுதியும் பல குடும்பங்களாகப் (Wards) பிரிக்கப்பட்டன. ஒவ்வொரு குடும்பிற்கும் ஒரு பிரதிநிதி தேர்ந்தெடுக்கப்பட்டார்" [11]. இவ்வாறு

தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதியே குடும்பனார் என்று அழைக்கப்பட்டிருக்க வேண்டும். சோழர் ஆட்சிக் காலத்தில் வேளாண்மை நிலங்களும் குடும்புகளாகப் பிரிக்கப்பட்டு வேளாண்மை நடைபெற்றதாகவே வரலாறு காட்டும். அதன்படி பார்த்தால் குடும்பனார்களாக இருந்து வேளாண்மையை மேற்பார்வை செய்தவர்களும் வேளாண்மை நிலங்களுக்கு உடமையாளர்களாக இருந்தவர்களும் தேவேந்திரர்கள் என்பது தெரியவரும். ஆனால் பிற்காலச் சோழர் ஆட்சியில் குடும்பு செய்து ஊர்த் தலைவராகவும் வேளாண் நிலவுடைமையாளர்களாகவும் விளங்கிய தேவேந்திரர்கள் பள்ளு இலக்கியம் தோன்றிய நாயக்கர் ஆட்சியில் பண்ணை வேலையாளாகச் சித்தரிக்கப்படுவது ஆட்சி மாற்றத்தினால்தான். இதனை வேளாண் நிலங்களின் பகிர்மானத்தைக் குறிக்கும் குடும்பு என்ற சொல்லின் அடியாகத் தோன்றிய குடும்பன் என்ற பெயர் தேவேந்திரர்களோடு மட்டுமே தொடர்புடையதாக இருப்பது கொண்டு உணரலாம்.

இன்றைய நடைமுறை வாழ்வில் தேவேந்திரர்களின் ஊர்த்தலைவர்களுக்கு ஊர்க்குடும்பன் என்பது பட்டமாகும். இவர்களுக்கு துணையாகக் காலாடி, ஊர்க்குடும்பன், ஒடும்பிள்ளை, வாரியன் போன்ற பட்டம் பெற்றவர்கள் துணைபுரிவார்கள். ஊர்க்குடும்பனாரே அந்த ஊரின் அனைத்து நல்லது கெட்டது நிகழ்ச்சிகளிலும் முடிவெடுக்கும் அதிகாரம் பெற்றவராவார். ஊர்ச் சபை அல்லது ஊர் மன்றங்களைப் (பஞ்சாயத்து) கூட்டுவதற்கு ஊர்க் குடும்பனாருக்கு இன்றும் அதிகாரம் உள்ளது. ஆக தேவேந்திரர்கள் சோழர் ஆட்சிக் காலத்தில் குடும்பு செய்து பெற்ற பட்டமாகையால் இது தொழிலின் அடிப்படையில் வந்து சேர்ந்த குலப்பட்டமாகும்.

இந்த மரபைப் போற்றும் வகையில்தான் தேவேந்திரர்கள் குடும்பனார் என்ற பட்டத்தைத் தங்களின் பெயருக்குப் பின்னால் தரித்துக் கொள்கின்றனர்.

இவ்வாறு குடும்பன் பட்டம் பெற்றவரின் வழிவந்தவர்கள் ஒவ்வொரு ஊரிலும் குடும்பன் வகையறா என்று அறியப்படுகின்றனர். இவ்வாறு குடும்பன் பட்டம் பெற்றவர்கள் தென்மாவட்ட கிராமங்கள் அனைத்திலும் வாழ்கின்றனர். இச்சிறப்புக் கருதி தென்மாவட்டங்களில் குடும்பன் என்பதே சாதிப் பெயராகவும் வழக்கிலிருக்கின்றது. இதனால் 50 ஆண்டுகளுக்கு முற்பட்ட இவ்வின ஆண்மக்கட் பெயர்களில் பெரும்பாலும் குடும்பன் என்ற பட்டத்துடன் மக்கட்பெயர்கள் அமைவதைக் காணமுடிகின்றன. காட்டாக அழகக் குடும்பன், ஆண்டிக் குடும்பன், ஊரான் குடும்பன், கருப்பணக் குடும்பன் என்று பெயர்கள் அமைவதைச் சொல்லலாம்.

**காலாடி**

குடும்பன் என்ற குலப்பட்டத்தோடு காலாடி என்ற குலப்பட்டமும் தேவேந்திரர்களுக்கு உரியது. குடும்பன், காலாடி என்றவாறு இரட்டை வழக்காகச் சேர்த்துச் சொல்லுமளவுக்கு குடும்பன் எனும் பட்டம் வேளாண்மையோடு தொடர்புடையது என்றால் காலாடி என்பது வீர மரபோடு தொடர்புடையது ஆகும். இன்று தேவேந்திரர்கள் வாழும் ஒவ்வொரு ஊரிலும் ஊர்க் குடும்பனார், ஊர்க்காலாடி, ஊர் வாரியன் என்ற மூன்று குலப்பட்டங்கள் தரித்த மூன்று தலைவர்களைக் காண முடியும். இவர்கள் மூவருமே ஊர் நிர்வாகத்தைக் கவனிக்கும் பொறுப்புடையவர்கள் ஆவர். ஊர்க் குடும்பனுக்குப் பல்வேறு வகையில் துணையாக இருந்து செயலாற்றுபவர் காலாடி ஆவார். காலாடியின் சொற்படி கேட்டுப் பணிபுரிபவர் வாரியன் ஆவார். இப்பட்டம் தமிழகத்தில் தென் மாவட்டங்களில் அனைத்து ஊரிலும் காணப்படுவதாகும். ஒவ்வொரு ஊரிலும் குடும்பன் வகையறா, காலாடி வகையறா என்றவாறு குலப்பிரிவுகள் காணப்படும்.

கதிரவேற்பிள்ளையின் தமிழ் மொழியகராதி காலாடி என்பதற்கு நால்வகைத் தானையிலொன்று என்று பொருள் கூறுகிறது [12]. தானையில் ஒன்று என்பது நால்வகைப் படையில் ஒன்றாக தரைப்படையைக் (காலாள் படையைக்) குறிப்பதாகும். இந்தக் காலாள் எனும் சொல்லின் அடியாகப் பிறந்தது தான் காலாடி என்ற சொல் ஆகும். இதே கருத்தினை இரா. தேவ ஆசிர்வாதம் காலாடி என்பதற்கு காலாள் படையைச் சேர்ந்தவன் என்றும் வேவுத் தொழில் புரிபவன் என்றும் பொருள் கொள்ளலாம் என்பார் [13].

ஆய்வாளர் களப்பகுதியில் கேட்டறிந்தபடி காலாடி என்பதற்கு படை திரட்டுபவன். ஆள்களைத் திரட்டுபவன், கூட்டம் சேர்க்கும் பொறுப்பாளி என்றே பொருள் சொல்கின்றனர்[14]. ஒரு சொல்லுக்கு அச் சொல் வழக்கிலுள்ள சமூகம் என்ன பொருள் கொள்கிறது என்றே பார்க்கவேண்டும். அதன்படி காலாடி என்பதற்கு படைகளைத் திரட்டி ஒன்று சேர்க்கும் படைத்தளபதி என்றே பொருள் கொள்ள வேண்டும்.

ஏனென்றால் இன்றைய சமூக வழக்கப்படி ஊர்க்குடும்பன் கட்டளைப் படி காலாடி ஊர்க் கூட்டத்திற்கோ வேறு சில பணிகளுக்கோ மக்களை ஒன்று திரட்டும் பணியினைச் செய்து வருகின்றார். முற்காலத்தில் அரசவம்சமாக இருந்த தேவேந்திரர் சமூக அமைப்பில் காலாடி எனும் பட்டமுடையவரின் தலைமையில் மக்கள் தேவை ஏற்படின் இராணுவமாக ஒன்று சேர்ந்திருப்பர். இது காலாள் படையாகச் செயலாற்றியிருக்கும். இதனாலேயே காலாள் படையின் தலைவன் காலாடி என்று

அறியப்பட்டிருக்க வேண்டும் என்றும் கருதலாம்.

இவ்வாறான காலாடிகள் (தேவேந்திரர்கள்) படை திரட்டுவதும், வெள்ளையருக்கு எதிராகப் போருக்குச் செல்வதும் குறித்து கட்டப்பொம்மன் கதைப் பாடல்கள் குறிப்பிடக் காண்கிறோம்.

சாத்தன் காலாடியும் சாத்தனும்
மொட்டைச் சங்கரன் காலாடி குட்டையனும்
கூத்தன் காலாடியும் மாடக் குடும்பனும்
விருப்பமாய் பள்ளக் கருப்பணன் காலாடி [15]

என்றவாறும்,

கூட்டங்காடு முத்துக் குடும்பனும்
அவனும் அவனுடைய இராணுவமும்
பெரிய காலாடி சின்னக் காலாடி
சேர்ந்த சனங்களும் ராணுவமும் [16]

என்றவாறும்,

ஏழுநூறு மடங்கே முன்னேபோக
ஏழுநூறு கம்பளங்கள் பின்னே போக
மட்டிலடங்கா காலாடிப் பள்ளர்கள்
மன்னனும் கூட நடந்து போக [17]

என்றவாறும், இடம் பெறும் சான்றுகள் காலாடிகள் என்றால் படையின் தளபதி, படைகளைத் திரட்டுவோன் என்பதற்காகக் கொடுக்கப்பட்ட பட்டமே காலாடி ஆகும் என்பதை அறியலாம்.

**வாரியன்**

தென் மாவட்டங்களில் குறிப்பாக விருதுநகர், மதுரை, இராமநாதபுரம் மாவட்டங்களில் குடும்பன், காலாடி, வாரியன் என்ற மூன்று பட்டங்களுடன் ஊர்த் தலைவர்கள் காணப்படுகின்றனர். பல இடங்களில் காலாடி செய்கின்ற பணியினையே வாரியனும் செய்கின்றார்.

பொதுவாக ஊர்க்குடும்பனாரின் தகவலை பொது மக்களுக்குச் சொல்லுதல், அவர்களின் கருத்தைப் பெறுவது பொது நிதி வசூல், அதன் கணக்கை வைத்திருத்தல், ஊர் நிர்வாகப் பணியில் ஈடுபடுதல், ஊர்ப்பொதுக் கோயில் விழாவிற்கு நிதி வசூல் செய்து அதனை நடத்துவது போன்ற பல பணிகளை வாரியன் செய்கின்றார். இதல்லாமல் பஞ்சாயத்து என்று வரும் நிலையில் ஊர்க்குடும்பனின் கட்டளைப்படி குற்றவாளியை

அழைத்து வந்து ஊர் மன்றத்தில் நிறுத்துவது வாரியனின் தலையாயபணி ஆகும்.

பிற்காலச் சோழர் ஆட்சிக் காலத்தில் பல வாரியங்கள் பிரிக்கப்பட்டு செயல் பட்டதனை முன்பே கண்டோம். "காட்டாக ஏரி வாரியம் குளம், ஊருணி போன்றவற்றைப் பாதுகாத்தது. இது போன்று கணக்கு வாரியம் கலிங்கு வாரியம், குடும்பு வாரியம் போன்றவையும் செயல்பட்டது" [18]. என்பதைப் பார்க்கிறோம். இவ்வாறான வாரியங்களுக்குத் தலைமை ஏற்றவர்கள் வாரியன் என்று அழைக்கப்பட்டிருக்கலாம். அப்பட்டம் பின்னாளில் தொடர்ந்து அவர்கள் வழி வந்தவர்களுக்கு வழங்கி வந்திருக்கும் இவ்வாறாக வந்தமைந்த பட்டமே வாரியன் எனும் பட்டமாகும். இவ்வாறு வாரியன் பட்டமேற்றுச் செயல்படுபவரின் வம்சாவழிகள் வாரியன் கூட்டம் என்று அழைக்கப்படுவதைப் பார்க்க முடிகிறது.

### பட்டக்காரர்

கோவை நகர் மற்றும் அதனைச் சுற்றியுள்ள கிராமங்கள் அனைத்திற்கும் அதாவது சோழியப்பள்ளர், கொங்குப்பள்ளர், கடையப்பள்ளர், பாண்டியப் பள்ளர் ஆகிய நான்கு பிரிவினருக்கும் நான்கு பட்டக்காரர்கள் (தலைவர்) காணப்படுகின்றனர். இப்பட்டக்காரர் பதவி பரம்பரை பரம்பரையாக வருவதாகும். இப்பட்டக்காரர்களின் வம்சாவழி பட்டக்காரர் வகையறா என்று பெயர் பெறுகின்றனர். இப்பட்டக்காரர்களுக்கு உதவியாக ஊர்ப் பண்ணாடி, ஓடும்பிள்ளை என பட்டம் பெற்ற இருவர் உதவியாளர்களாக பணியாற்றுகின்றனர். இப்பட்டக்காரர்கள் ஒருவகையில் தென் மாவட்டங்களில் காணப்படும் ஊர்க் குடும்பன் பதவியோடு ஒப்புமையுடையவர்கள் ஆவர்..

### பண்ணாடி

கோவை மாவட்டத்தில் உள்ள தேவேந்திர குலத்தாருள் ஒரு பகுதியினரும் சேலம் மாவட்டத்தில் வாழும் தேவேந்திர குலத்தாரும் பண்ணாடி என்ற குலப்பட்டம் பூண்டு வருகின்றனர். இவர்களது குடியிருப்பு பண்ணாடி தெரு என்றே வழங்கி வருகின்றது. பண்ணை என்பது மருதநிலம், நீர், நிலம், வயல் எனச் சூடாமணி நிகண்டு கூறுகின்றது[19]. கொங்கு நாட்டில் பண்ணாடி என்பது சிறப்பாக நிலக்கிழார்களைக் குறிக்கும் சொல்லாகப் பயன்படுத்தப்படுகின்றது. தேவேந்திர குலத்தாரே இப்பட்டத்துடன் அழைக்கப்படுகின்றனர். தேவேந்திரர் ஊர்த்தலைவரை ஊர்ப்பண்ணாடி என்றும் அழைக்கின்றனர். இவ்வாறு ஊர்ப்பண்ணாடி பட்டம் பெற்றவர்களின் வகையறா, ஊர்ப்பண்ணாடி கூட்டம் என்று பெயர் பெறுகின்றது.

**மண்ணாடி**

கோயம்புத்தூர் மாவட்டம் மேற்குப் பகுதியில் வாழும் தேவேந்திர குலத்தார் மண்ணாடி என்ற குலப்பட்டம் தரித்து வருகின்றனர். பண்ணாடி என்பதன் திரிபே மண்ணாடி ஆகும். இதே குலப்பட்டம் கேரளத்தில் பாலக்காட்டுப் பகுதியில் உழவுத் தொழில் செய்து வாழும் ஒரு சமூகத்திற்கு உரித்தாகிவருவதாகக் குறிப்பிடுவர் [20].

**பலகன்**

தேவேந்திர குல வேளாளர்களில் ஒரு பிரிவினர் பலகன் என்று அழைக்கப்படுகின்றனர். இச் சொல்லுக்கு விளக்கம் காண முயன்ற தேவ ஆசிர்வாதம் பலகான் என்ற சொல் பலவான் என்று உருத்திரிந்திருக்கலாம் என்று சொல்லுவார். "பலகன் என்ற பெயர் ஒரு வேலை பலகான் (பலகாடு) களையும் பண்ணை நிலமாக்கியவர் என்பதாலும் இப்பெயர் வந்திருக்கலாம்" என்று சொல்லும் சிற்பி பாலசுப்பிரமணியம் கருத்து நினைக்கத்தக்கது [21]. பழனிப் பட்டயம் பலகன் என்ற பட்டம் தேவேந்திரர்களுக்கு உரியதென்று சொல்கின்றது. மேலும் சேலம் மாவட்டத்தில் வாழும் பலகன் என்னும் பட்டமுடைய முத்துப் பலகன், ராசிபுரம் கன்னப்பலகான் என்றவாறு தேவேந்திரர்கள் குறித்துச் சொல்லி இவர்களது திருப் பணிகள் பழனி கோவிலுக்குச் சொந்தமானது என்று பழனி செப்புப் பட்டயம் சொல்லும். இப்பட்டம் 500 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே தேவேந்திரர்களுக்கு உரியது என்பதை இதன்மூலம் அறியலாம்.

**பணிக்கன்**

தஞ்சை மாவட்டம் பாபநாசம் தாலுகாவில் வாழும் தேவேந்திர பிரிவினரில் ஒரு பிரிவினர் பணிக்கர் என்ற குலப்பட்டம் தாங்கி வருகின்றனர். இதே பட்டத்தை பழனிப் பட்டயமும் தேவேந்திரர்களுக்கு உரியது என்று குறிக்கிறது. பணிக்கன் என்றால் படைக்கலம் பயிற்றுவோன் என்று சென்னைப் பல்கலைக்கழக அகராதி பொருள் கூறும். கேரளாவில் போர்ப் பயிற்சி செய்வோருக்கும், தேகப் பயிற்சி செய்வோருக்கும் பணிக்கன் என்று பெயர் இருப்பதாக குறிப்பிடுவர் [22]. இதிலிருந்து பணிக்கன் என்றால் படைக்கலம் பயிற்றுவிப்பவர்களுக்கு ஏற்பட்ட பட்டம் என்று தெரிகிறது.

**மூப்பன்**

திருச்சி, தஞ்சை, சேலம் மாவட்டங்களில் வாழும் தேவேந்திர குலத்தாருள் சிலர் மூப்பன் என்ற குலப்பட்டம் பூண்டு வருகின்றனர். தேவேந்திர குலத்தாருக்கு மூப்பன் பட்டம் உரியது என்பதைப் பழனிப்

பட்டயமும் குறிப்பிடுகின்றது. பட்டயத்தில் வருமாறான பெயர்கள் காணப்படுகின்றன. கனியூர் மூப்பன், ஆண்டிமூப்பன், பெரியாமூப்பன் போன்ற பெயர்கள் மூப்பன் பட்டம் 500 ஆண்டுகளுக்கு முன்பே தேவேந்திரர்களுக்கு உரியது என்பதைக் காட்டுவதாகும்[23]. முசிறி தாலுகாப் பகுதியில் தேவேந்திரர்களின் ஊர்த்தலைவருக்கு புள்ளி மூப்பன், நாட்டு மூப்பன் என்ற பட்டமும் மூப்பன் என்ற பட்டமும் வழங்கப்படுகின்றன. ஊர் மற்றும் சமூகப் பஞ்சாயத்துத் தலைவரை மூப்பன் என்று வழங்கும் பழக்கம் இருப்பதனால் தேவேந்திரர்கள் மூப்பன் பட்டம் பூண்டு விளங்குகின்றனர். மூப்பன் எனில் வயதில் மூத்தவன், ஊர்த்தலைவன் என்று பொருள்படும். திருச்சி மாவட்டத்தில் தேவேந்திர குலத்தார் வேளாண்மைத் தொழிலுக்கு வேலையாட்கள் சேர்த்து வேலை வாங்குபவரை மூப்பன் என்றே அழைக்கின்றனர்.

### பாண்டியன்

நெல்லை மாவட்டச் செங்கோட்டைப்பகுதி வாழ் தேவேந்திர குலத்தார் பாண்டியன் என்ற பட்டம் பூண்டு வருகின்றனர். சுமார் 70-80 ஆண்டுகளுக்கு முன் செங்கோட்டைப் பகுதி வாழ் மறவர் பாண்டியர் என்ற பட்டம் தங்களுக்கே உரியது என்றும், தேவேந்திர குலத்தார் அதைத் தரிக்கக் கூடாது என்றும் அன்றைய திருவனந்தபுரம் உயர் நீதி மன்றத்தில் வழக்குத் தொடர்ந்தனர் என்றும், அவ்வழக்கை விசாரித்த உயர் நீதிமன்றம், பாண்டியன் என்ற பட்டம் தேவேந்திர குலத்தாருக்கே உரிய ஒன்று என்றும் அது மறவருக்கு உரியதல்ல என்றும் தீர்ப்பு வழங்கியதாக இப்பகுதிவாழ் தேவேந்திர குலத்தார் கூறுகின்றனர்[24]. ஆனால் இன்று பாண்டியன் எனும் பட்டம் அனைத்து இன மக்களுக்கும் ஆள் பெயராகச் சூடிக் கொள்ளும் நிலையைப் பார்க்கின்றோம். பாண்டியன் எனும் பட்டம் பாண்டிய நாட்டின் மண்ணோடு தொடர்புடையது. பாண்டிய நாட்டில் மன்னர்களின் வழிவந்தோர் தங்களைப் பாண்டியன் என்று அழைத்துக் கொண்டிருக்கலாம். அவ்வகையில் பார்த்தால் பிற்காலப்பாண்டிய மன்னர்கள் வரை தேவேந்திரர்கள் பாண்டிய மன்னர்களாக விளங்கியதற்கான சான்றுகள் காணப்படுகின்றன. நெல்லைச் சீமையைச் சேர்ந்த அம்பா சமுத்திரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்த வீரக்கன்ற் கரையாள ராஜா, வீரமார்த்தாண்ட ராஜா போன்ற பிற்காலப் பாண்டிய மன்னர்களைத் தேவேந்திர வேளாளர் என்றே அறிகின்றோம்[25]. இதன்படி பாண்டியன் எனும் பட்டம் தேவேந்திரர்களுக்கு உரியதாக இருந்து இன்று பலராலும் சூட்டிக்கொள்ளும் ஆள் பெயராக மாறியுள்ளது எனலாம்.

**வாதிரியார்**

சிதம்பரனார், நெல்லை மாவட்டப் பகுதிகளில் தேவேந்திர இனத்தில் வாதிரியார் என்ற பிரிவினர் வாழ்ந்து வருகின்றனர். இவர்களுடைய தொழில் நெசவும், விவசாயமும் என்று தெரிய வருகின்றது. குறிப்பாகப் பரமன்குறிச்சி பகுதியில் வாழும் வாதிரியார்களிடம் ஐந்து உட்கிளைகள் இருப்பதாக தெரிகிறது. இவர்கள் நெசவுத் தொழிலை முதன்மைத் தொழிலாகச் செய்து வருகின்றனர். ஆனால் நெல்லை மாவட்டத்தில் வாழும் வாதிரியார்கள் வேளாண்மையை முதன்மைத் தொழிலாகக் கொண்டு வாழ்ந்து வருகின்றனர்.

**தொழில் அடிப்படையில் அமையும் கூட்டங்கள்**

மள்ளர்களுக்கு அதாவது உழவர்களுக்கு களமர் என்ற பெரும் காணப்படுகின்றன. களமர் என்றால் மருதநிலத்து உழவர் என்று பெயர். இதே போன்று இம்மக்களிடம் குலப்பிரிவுகளில் காணப்படும் கூத்தப்பள்ளர் கூத்தாடுதல் தொழிலையும், மடையப்பள்ளர் மடைத் தொழிலையும் பண்டாரப் பள்ளர் கோயில் பூசாரித் தொழிலையும் செய்து வந்தமையால் ஏற்பட்ட பெயராகும். இவ்வாறு தொழில் அடிப்படையில் அமைந்த குளத்துப் பள்ளர், பண்டாரப் பள்ளர் ஆகிய கூட்டத்தினர் குறித்து வருமாறு காணலாம்.

**குளத்துப் பள்ளர்**

விருதுநகர் மாவட்டம் இராஜபாளையம் வட்டத்தில் பிள்ளையார் குளம், வேப்பங்குளம், செந்நெல்குளம் ஆகிய ஊர்களில் குளத்துப் பள்ளர் எனும் கூட்டத்தினர் வாழ்கின்றனர். மேற்சொன்ன ஊரின் பெயர் அங்குள்ள குளத்தின் பெயரால் வழங்குவதையும் பார்க்க முடிகின்றன. இந்த மூன்று குளங்களும் அப்பகுதியிலுள்ள 1200 ஏக்கர் நிலத்திற்கு நீர்பாசன வசதியளிக்கின்றன. இந்தக் குளங்களின் நீர் நிர்வாகத்தை பண்டைக் காலந்தொட்டு செய்து வந்த தேவேந்திரர்களின் வழித்தோன்றல்கள் குளத்துப் பள்ளர் எனும் கூட்டப் பெயரில் அழைக்கப்படுகின்றனர். இவர்கள் தங்களுக்குள் பங்காளிகளாகக் கருதுகின்றார்கள். இவர்களின் பனி, மழை காலத்திலும் மழை இல்லாத காலத்திலும் கண்மாயின் கரையைப் பாதுகாப்பதும் நீர் நிறைந்துவிடின் கண்மாய் உடையாமல் பாதுகாப்பதும் வேளாண்மை காலத்தில் நீரினை மடையிலிருந்து திறந்து விடுவதும் ஆகும். இதற்காக இவர்கள் வேளாண் நில உரிமையாளர்களிடம் மடைக்கூலி என்று நெல் பெற்றுக் கொள்கின்றனர். இவ்வாறு கண்மாயைப் பராமரித்து வாழும் குளத்துப் பள்ளரின் வம்சாவளிகள் 750 பேர் இராஜபாளையம் பகுதியில் மட்டும்

வாழ்வதாகக் குளத்துப் பள்ளரும் குள உரிமையும்[26] எனும் கட்டுரையில் த. அய்யனார் குறிப்பிடுவார். இதே போன்று தமிழகம் முழுமையும் மடைப் பள்ளர், நீராணிக்கர் எனும் பெயர்களில் செய்யும் தொழிலால் கூட்ட முறையில் பங்காளிகளாக வாழ்ந்து வரும் தேவேந்திர குல வேளாளர்களைக் காணமுடியும்.

## பண்டாரப் பள்ளர்

பண்டாரப் பள்ளர் எனும் ஒருவகைக் குலப்பிரிவினர் தமிழகம் முழுமையும் வாழ்ந்து வருகின்றார்கள். இப்பண்டாரப் பள்ளர் பிரிவு குறித்து நத்தம் செப்புப் பட்டயமும் குறிப்பிடுகின்றது. பழனி முருகன் கோயிலில் முற்காலந்தொட்டு பண்டாரங்களே பூசை செய்து வந்தனர் என்றும் இவர்களிடம் திருநீறு பெற விரும்பாத இராமப்பய்யன் பிராமணர்களை நியமித்தான் என்றும் வரலாற்று வழி அறிகின்றோம்[27]. இதற்கு அரண் சேர்பதாகப் பழனிகோயிலில் தேவேந்திரர்களுக்கு முழு வழிபாட்டு உரிமை இருப்பதை பழனி கோயில் செப்புப் பட்டயம் குறிப்பிடும். மேலும் பள்ளர் மடம் எனும் ஒரு மடம் இன்றும் இவர்களால் பராமரிக்கப்படுவதையும் காண்கின்றோம். இங்கு பண்டாரங்களாய் பூசை செய்து வந்த பண்டார ஆறுமுகக் குடும்பனாரின் வம்சாவளிகள் பண்டார வையாபுரிக் குடும்பன் அவரின் வழி வந்த ஆறுபேரின் மூலம் 520 குடும்பங்களாகப் பெருகி இன்னமும் பழனிமலைக்கு கீழ் பழனி தண்டபாணி நிலையத்திற்கு எதிரே வாழ்ந்து வருவதைக் காணமுடியும். இவர்கள் வசமே பள்ளர் மடம் காலங்காலமாய்ப் பொறுப்பில் இருந்து வந்ததாகவும் தெரிகின்றது. பழனி தைப்பூச விழாவில் பள்ளர் மட மண்டகப்படிக்கு முருகன் முதன் முதலில் எழுந்தருளும் உரிமையும் இதனால்த்தான் எனலாம். இதே போன்று முருகனைக் குல தெய்வமாகக் கருதி வழிபடும் திண்டுக்கல், செம்பட்டியைச் சேர்ந்தவர்கள் தங்களைப் பண்டாரக் கூட்டம் என்று அழைத்துக் கொள்வதையும் காணமுடிகின்றது. இதே பண்டாரகக் கூட்டம் திண்டுக்கல் மாவட்டம் செங்கோட்டை, வாலாங்கோட்டை, செம்பட்டி, திம்மி நாயக்கன் பட்டி, குறும்பபட்டி, செல்லாயிபுரம் போன்ற ஊர்களில் வாழ்ந்து வருகின்றனர். "பண்டாரத் தொழில் என்பது கோயில்களில் பூசாதித் தொழில் செய்வதைக் குறிக்கும்" என்று அபிதான சிந்தாமணி குறிப்பிடுவதும் இங்கு கருதத்தக்கது[28].

**இதே போன்று இன்றளவில் கூட ஒவ்வொரு ஊரிலும் செய்தொழிலின் அடிப்படையில் சில கூட்டப் பெயர்கள் வழங்கி வருவதைக் காணமுடிகிறது.**

| | |
|---|---|
| 1. இரைக்காரி கூட்டம் | சொக்கம்புதூர் - கோவை |
| 2. கொத்துக்காரர் கூட்டம் | புலியகுளம் - கோவை |
| 3. மீன்காரக் கூட்டம் | புலியகுளம் - கோவை |
| 4. கோடாங்கி கூட்டம் | போவிபட்டி - மதுரை |

## குலதெய்வப் பெயரால் அமையும் கூட்டங்கள்

இம் மக்களிடம் காணப்படும் பெரும்பாலான கூட்டங்களின் பெயர் அவரவர் வழிபடும் குலதெய்வத்தை வைத்தே அறியப்படும். ஒரு குலத்தெய்வத்தை வழிபடுவர்கள் ஒரே மூதாதையின் வழிவந்த பங்காளிகள் அதாவது சகோதரர்கள் என்பதால் குல தெய்வங்களின் வழிபாடே கூட்டமுறையில் பெரிய நெருக்கத்தை ஏற்படுத்துவதாக அமைகின்றது. தேவேந்திர குல வேளாளர்களை தெய்வேந்திரப் பள்ளர், இந்திர சாதி என்றெல்லாம் பொதுப் பெயரிட்டு அழைப்பதுண்டு. இது இவர்களின் தெய்வ வழிபாட்டின் காரணமே ஆகும். தமிழகத்தில் குலதெய்வத்தால் அறியப்படும் இம்மக்களின் கூட்டங்களே பல ஆயிரக்கணக்கில் இருப்பதாகத் தெரிகின்றன. இவ்வகையில் அமையும் கூட்டங்களின் பெயர்கள் வருமாறு.

| கூட்டப்பெயர் | ஊர் |
|---|---|
| 1. மாறநாட்டுக் கருப்பசாமி | தென் மாவட்டம் முழுவதும் கூட்டம் பரவலாக |
| 2. பெரிய கருப்பச்சாமி கூட்டம் | எழுமலை - மதுரை மாவட்டம் |
| 3. கருப்பசாமி கூட்டம் | எழுமலை - மதுரை மாவட்டம் |
| 4. தாடா நாச்சியம்மன் கூட்டம் | எழுமலை - மதுரை மாவட்டம் |
| 5. கருப்பணசாமி கூட்டம் | " " |
| 6. ஐயனார் கூட்டம் | எழுமலை - மதுரை மாவட்டம் |
| 7. ஆதாழியம்மன் கூட்டம் | மேட்டுப்பட்டி - திண்டுக்கல் மாவட்டம் |
| 8. குந்தன் கூட்டம் | ராமநாதபுரம் - கோவை |
| 9. சாத்தாரம்மன் கூட்டம் | வீராட்சிமங்கலம் - தாராபுரம் |
| 10. செண்பக மூர்த்தி கூட்டம் | மேட்டுப்பட்டி - (தி.மா.) |
| 11. கழுவுத்தம் மன் கூட்டம் | சிங்காநல்லூர் - கோவை |
| 12. கன்னியாயி கூட்டம் | சிங்காநல்லூர் - கோவை |
| 13. மரக்காளியம்மன் கூட்டம் | புலியகுளம் |

14. இடும்பன் கூட்டம் — பெருவளநல்லூர் - திருச்சி மாவட்டம்

15. தொட்டிச்சியம்மன் கூட்டம் — மேட்டுப்பட்டி - தி.மா.

16. துளசியம்மன் கூட்டம் — சொக்கம்புதூர் - கோவை

17. சங்கிலிக்கருப்பு கூட்டம் — மேட்டுப்பட்டி - திண்டுக்கல் மாவட்டம்

இவ்வாறு ஒவ்வொரு வட்டாரத்திலும் ஊரிலும் இம்மக்கள் வழிபடும் குல தெய்வப் பெயருடன் காணப்படும் கூட்டங்கள் மிகுந்து காணப்படுகின்றன. சில பெரிய அளவிலும் காட்டாகஊறநாட்டுக் கருப்ப சாமி கூட்டம், சில சிறிய அளவிலும், ஒலக்க கூட்டம் இக்கூட்டத்தார் பெரியகுளம் வட்டம் கெங்குவார்பட்டியில் மட்டும் வாழ்கின்றனர். உலக்கையைக் குல தெய்வமாகக் கருதி வழிபடுகின்றனர். காரணம் இவர்கள் சாதிப் பிரச்சினையால் ஊர் விட்டு ஊர் வருகையில் ஆளுக்கொரு உலக்கையை ஆயுதமாகக் கொண்டு எதிரியைத் தாக்கிவிட்டு இங்கு வந்து சேர்ந்தனராம். அதிலிருந்து தம்மைக் காத்த உலக்கையையே குல தெய்வமாகக் கருதி வழிபடுகின்றனர். இவ்வழிபாட்டையுடையவர்கள் அனைவரும் ஒரே மூதாதையின் வழிவந்தவர்களாகக் கருதப்படுகின்றனர்.

## தனி மனிதனின் பெயர் கொண்ட கூட்டங்கள்

சில கூட்டங்களின் பெயர்கள் தனி மனிதனின் பெயர்களைக் கொண்டு அமைந்திருப்பதும் உண்டு. இக்கூட்டத்தை இத்தனி மனிதனே தோற்றுவித்ததாகக் கருதுகின்றனர். காட்டாகத் தேவேந்திர குலம் எனும் குலம் கூட மருதநிலத்தலைவனான வேந்தன் ஒருவனால் தோற்றுவிக்கப்பட்டதே என்று கருதுவதைக் கூறலாம். இதுவல்லாமல் இன்று இவ்வினத்தினரிடையே பல கூட்டங்கள் தனி மனிதப்பெயரால் அமைந்திருப்பதைக் காணமுடிகின்றன. சான்றாக

1. வீரக்கிழவன் கூட்டம் (எழுமலை, மதுரை)
2. அரியக்கிழவன் கூட்டம் (எழுமலை, மதுரை)
3. கிளியன் பெரியாம்பள கூட்டம் (எழுமலை, மதுரை)
4. நல்லான் கூட்டம் (எழுமலை, மதுரை)
5. வலியாநாகப்பன் கூட்டம் (ஏழுமலை, மதுரை)
6. ராக்குப்பிள்ளை கூட்டம் (தஞ்சாவூர்)
7. கிள்ளி வளவன் கூட்டம் (தஞ்சாவூர்)
8. ஏசன் கூட்டம் (இராமநாதபுரம், கோவை)

9. ராமர் கூட்டம் (வீராட்சி மங்கலம், ஈரோடு)

10. சித்தன் கூட்டம் (கணபதிபாளையம், ஈரோடு)

11. சிவனாண்டி பெரியாம்பிள்ளை கூட்டம் (கணபதிபாளையம், ஈரோடு)

இவ்வாறு ஒவ்வொரு ஊரிலும் தனிமனிதர்களின் பெயர்களில் பல கூட்டங்களின் பெயர்கள் காணப்படுகின்றன.

**பிறகூட்டமுறைகள்**

**இருளப்பள்ளர்** - பழனிப் பட்டயத்தில் இருளப் பள்ளர் எனும் குலப்பிரிவு சொல்லப்படுகின்றது. "கோயமுத்தூர் மாவட்டத்தில் வெட்டுக்காட்டு இருளர் வாழ்கின்றனர். இவர்களை இருளப்பள்ளர் என்றும் அழைப்பதும் உண்டு"[29] இவர்கள் இருளர்தான்[30], இவர்களிடம் தாம் பள்ளர் எனும் சாதியினர் என்ற கருத்து அவர்களிடம் இல்லை என்பார். அண்மையில் இவர்கள் குறித்து ஆய்வு மேற்கொண்டுவரும் டாக்டர் செல்லப்பெருமாள்[31], இருப்பினும் இவர்களின் இறப்புச் சடங்குகளையும் ஆய்வு செய்தால் இவர்கள் தேவேந்திரர்களின் வழி வந்தவர்கள் என்று உறுதிப்படுத்தி விட முடியுமென்றும் சொல்கின்றனர்[32].

**வன்னிச்சி கூட்டம்**

இப்பெயரையுடைய கூட்டத்தினர் கோவையிலுள்ள வன்னியம் பாளையத்தில் வாழ்கின்றனர். படையாட்சி என்றும் வன்னியர் என்றும் ஒரு சாதியினரின் பெயராக இக்கூட்டம் இருப்பதினால் இச்சாதிப் பெயர் கொண்ட கூட்டம் தங்களை வன்னியர் குலத்தினருடன் தொடர்பு படுத்திப் பேசுகின்றனர். வன்னியர்களில் பள்ளி எனும் பிரிவு இருப்பதாலும் "பள்ளிமுத்தினால் படையாட்சி" எனும் பழமொழி வழங்கிவருவதாலும் தென் மாவட்டங்களில் பல கூட்டங்களின் பெயர் வன்னிச்சி கூட்டம் என்று இருப்பதாலும் தஞ்சாவூரில் தேவேந்திரரில் ஒருபிரிவினர் படையாட்சி கூட்டம் என்று சொல்லிக் கொள்வதாலும் இவர்களிடம் தற்காலத்தில் "வடக்கே வன்னியரும் தெற்கே தேவேந்திரரும் ஒரு தாயின் மக்கள்" என்ற கருத்து பேசப்படுவதாலும் இக்கூட்டம் குறித்து மேலும் விரிவாக ஆய்வு செய்யப்படவேண்டும்.

**பந்தல் முட்டிப் பள்ளர்**

**இதேபெயரில் பந்தலடிப்பள்ளர் எனும் ஒருபிரிவு நத்தம் செப்புப்பட்டயத்தில் காணப்படுகின்றது. இதற்கான பொருள் விளங்க வில்லை. ஆனால் பந்தல் முட்டிப் பள்ளர் என்போர் கோவை பேரூரில்**

வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் திருமணத்தின் போது மணமேடையில் வைக்கும் அரசாணிப் பானைகள் பந்தலை முட்டும் வரை உயராக வைப்பதால் இப்பெயர் வந்தது என்று சொல்வார் புலவர் கி.ஆ. குப்புராசு[33].

## துலுக்கப் பள்ளர்

இப்பிரிவு பழனி பட்டயத்தில் குறிப்பிடப்படுகின்றது. நாயக்கர் ஆட்சி தமிழகத்தில் ஏற்பட்டபோது அவர்களின் அச்சுறுத்தலிருந்து விடுதலைபெற அன்றைக்கு நாயக்கர்களின் பகைவராகப் படையெடுத்து வந்த இஸ்லாமியரின் மதத்திற்கு தேவேந்திரர்கள் மாறினர். இதனால் மதம் மாறிய பள்ளர் அன்று துலுக்கப் பள்ளர் என்று பெயர்பெற்றிருக்கலாம். இடும்பன் கோயில் பூர்வீகப்பட்டயத்தில் அதாவது 1881ம் ஆண்டு எழுதப்பட்டபடி பழனி ஆயக்குடியைச் சேர்ந்த காதர்சா ராவுத்தர் பொன்னி மலைக் குடும்பன் விவசாயம்[34] என்று இருப்பதால் தேவேந்திரர்கள் இஸ்லாம் மதத்திற்கு மாறினாலும் தாங்கள் விவசாயம் செய்வதையும் குடும்பனென்று தங்களின் பெயருக்குப் பின்னால் போட்டுக் கொள்வதைக் பார்க்கமுடிகின்றது. ஆக இந்து மதத்திலிருந்து இஸ்லாம் மதத்திற்கு மாறிய தேவேந்திரர்கள் துலுக்கப்பள்ளர் என்று அழைக்கப்பட்டிருக்கலாம்.

## நாகன் கூட்டம்

விருதுநகர் மாவட்டம் கிராயூரில் வாழும் தேவேந்திரரில் ஒரு பிரிவினர் நாகன் கூட்டம் என்று பெயர் பெறுகின்றனர். இவர்களின் குலதெய்வம் நாகதேவதை ஆகும். இவர்களுக்குப் பாம்புகடித்தால் விஷம் ஏறாதாம். இவர்கள் பாம்புக்கடிபட்டவர்களுக்கு மந்திரித்தால் விஷம் இறங்கிவிடுமென்றும் சொல்கின்றனர். இதே போன்று சாத்தூர் வட்டம் கும்பாம்பட்டியில் விஷவாங்கிக் கூட்டம் எனும் பெயரில் ஒரு கூட்டம் இருக்கின்றது. இவர்களின் முன்னோர் பாம்பு கடிக்கு விஷ வைத்தியம் செய்ததனால் இவர்களின் வழிவந்தோருக்கு இப்பெயர் ஏற்பட்டதென்று அறிய முடிகின்றது. இன்றும் இக்கூட்டத்தாரிடம் விருதுநகர் மாவட்டம் முழுவதிலிருந்தும் வந்து விஷ கடிக்கு வைத்தியம் செய்துவிட்டுப் போவதைப் பார்க்கமுடியும். இக்கூட்டத்தாரும் பாம்புப்புற்றைக் கருப்பச்சாமியுடன் இணைந்தே வழிபடுகின்றனர்.

## கடையப்பள்ளர்

தேவேந்திர குல வேளாளர்களில் ஒரு பிரிவினர் கடையப் பள்ளனார் என்று அழைக்கப்படுகின்றனர். கடையர் எனும் பெயர் சங்க காலத்திலேயே மருதநில மக்களுக்கு உரியதாகக் குறிக்கப்படுகின்றது. மருதநிலத்து உழவர்களாகிய மள்ளர்களின் தெய்வம் இந்திரன், இந்நிலத்தில் வாழ்ந்த

மக்கள் மள்ளர், உழவர், உழத்தியர், கடையர், கடைசியர் என்று வழங்கப்பட்டனர்[35] என்பர். இதிலிருந்து இன்று கடையப்பள்ளனார் என்று அழைக்கப்படும் தேவேந்திரர்களின் ஒரு பிரிவினரே சங்க காலத்தில் கடையர் என்று பெயர் பெற்றிருக்க வேண்டும் என்பதைத் தெரியலாம். இப்பிரிவினர் தமிழகம் முழுவதும் பரவிவாழ்ந்து வருவதைக் காணமுடிகின்றது.

## தொகுப்புரை

ஒரு குலத்தைச் சேர்ந்தவர்கள் அனைவரும் ஒரு மூதாதையரிடமிருந்து தோன்றியதாகக் கொண்டு குலம் என்பதற்கு வரைவிலக்கணம் சொல்லப்படுகின்றது.

தேவேந்திர குல வேளாளர் தமது சாதிக்குள்ளேயே திருமணம் செய்து கொள்ளும் அகமண வழக்கத்தினர். ஆனால் ஒரு கூட்டத்தாருக்குள் திருமணம் செய்து கொள்ளும் வழக்கம் இல்லை.

இங்கு குலம் என்பதைச் சாதி என்றும், அதற்குள் காணப்படும் பல்வேறு உட்பிரிவுகளையும், உட் பிரிவுகளுக்குள் காணப்படும் பல கிளைகளையும் உட்பிரிவுகளையும் கூட்டம் என்றும் வரையறுக்கலாம். ஒரு குலம் காலப்போக்கில் பல்கிப் பெருகி பல கூட்டங்களாக மாறி வருகின்றன என்பதை இவ்வியல் கண்டறிந்து சொல்லியுள்ளது.

இம்மக்கள் மருதநிலக் கடவுளான வேந்தனின் (இந்திரன்) வழிவந்தவர்கள் என்றும், இந்த வேந்தனின் வழிவந்தவர்களே பல குலங்களாகவும் கூட்டங்களாகவும் காணப்படுகின்றனர் என்றும் அறியமுடிகின்றது.

திருமண முறையில் வேறொரு கூட்டத்திடம்தான் உறவு கொள்ளும் வழக்கம் இருக்கின்றது.

இம்மக்களிடம் காணப்படும் குலப்பிரிவுகள் தெய்வங்களின் அடிப்படையிலும், குலப்பட்டங்களின் அடிப்படையிலும், நாட்டின் அடிப்படையிலும், செய்தொழிலின் அடிப்படையிலும் தனி மனித முன்னோரின் பெயரினை அடிப்படையாகக் கொண்டும் காணப்படுகின்றன.

இவர்களின் பெரும்பாலான கூட்டப்பிரிவுகள் குல தெய்வங்களின் அடிப்படையிலேயே கண்டறியப்பட்டு நிலைப்படுத்தப்படுகின்றன.

குலப்பிரிவுகளாக இவர்களிடம் 150க்கும் மேலாக வழக்கிலிருப்பதைக் கண்டறிந்து இவ்வாய்வு சொல்லியுள்ளது. ஆயிரத்திற்கு மேலான குலப்பிரிவுகள் இம்மக்களிடம் இருப்பதை இவ்வாய்வு சுட்டியுள்ளது.

கூட்ட முறைகள் தமிழகம் முழுமைக்கும் ஆயிரங்களின் பல மடங்குகளாகக் காணப்படுவதை இவ்வியலின் செல் நெறி உறுதிப்படுத்தியுள்ளது.

பெரும்பாலான குலப்பட்டங்களும் குலப்பிரிவுகளும் வேளாண் மரபுடனும் வீரமரபுடனும் தொடர்புடையதாகவே காணப்படுகின்றன.

## குறிப்புக்கள்

1. பக்தவச்சல பாரதி, சி. பண்பாட்டு மானிடவியல். ப - 413.
2. மேலது
3. மேலது ப - 381
4. தேவ ஆசிர்வாதம், இரா. பள்ளர் அல்ல மள்ளர். பக் 2-3.
5. மேலது
6. மேலது
7. குருசாமிசித்தர், தமிழ் இலக்கியத்தில் பள்ளர் (மள்ளர்) தேவேந்திர குல வேளாளர். பக் 393 - 395.
8. குருசாமிசித்தர் (ப.ஆ.) தமிழர் பண்பாட்டு வரலாறு பழனிப்பட்டயம், நத்தம் செப்புப் பட்டயம். பக். 273 - 297.
9. மேலது ப - 395.
10. ஞானசேகரன், தே. சாதியின் தோற்றமும் வளர்ச்சியும் (கட்டுரை). மள்ளர் மலர், ஆகஸ்டு - 1995, ப-10.
11. மேலது
12. கதிரை வேற்பிள்ளை, தமிழ் மொழி அகராதி. ப-456.
13. தேவ ஆசிர்வாதம், இரா. மூவேந்தர் யார்?. ப - 177.
14. சின்னச்சாமி, க. (60) ஆசிரியர், தேவேந்திர குல வேளாளர், காமராசபுரம், வத்தலக்குண்டு. திண்டுக்கல் மாவட்டம்.
15. வானமாமலை, நா. வீரபாண்டிய கட்டப் பொம்மன் கதைப் பாடல். ப - 31.
16. மாணிக்கம், வீ. கட்டப் பொம்மன் கும்பிப் பாடல். ப - 40.
17. மேலது ப - 17.
18. ஞானசேகரன், தே. மு.கா. ப - ப - 9, அக்டோபர், மள்ளர் மலர், 1998.
19. தேவ ஆசிர்வாதம், இரா. மு. கா.ப - 173.

20. தேவ ஆசிர்வாதம், இரா. மு. கா. ப. ப - 174.
21. சிற்பி பாலசுப்பிரமணியம், தேவேந்திரகுல வேளாளர் ஆய்வுக்கான சில குறிப்புகள் கட்டுரை. குருசாமிசித்தர் (ப.ஆ.) தமிழர் பண்பாடு வரலாறு. ப - 64.
22. தேவ ஆசிர்வாதம், இரா. மு.கா.ப, ப - 169.
23. பழனிப்பட்டயம், மு.கா.ப.
24. பரமேஸ்வரி, சி. தேவேந்திரர்களின் வீரவரலாறு (கட்டுரை). பிப்ரவரி, மள்ளர் மலர், 1996 ப - 10.
25. மேலது.
26. அய்யனார், த. குளத்துப் பள்ளரும் குல உரிமையும், வெளியிடப் படாத ஆய்வுக்கட்டுரை. 1999.
27. இராஜசேகரன், திருக்கோயில்களில் தொழில் சமுதாய உறவுகள். ப - 67.
28. அபிதான சிந்தாமணி, ப - 1019.
29. கிருஷ்ணசாமி, க. கூட்டமும் திருமணமும். ப - 72.
30. பெரியாழ்வார், தமிழ்பல்கலைக்கழகம், நேரில் கேட்டறிந்தது: தஞ்சை.
31. செல்லப்பெருமாள், த. நாட்டார் வழக்காற்றியல்த் துறை, தூய சவேரியர் கல்லூரி, பாளையங்கோட்டை, நேரில் கேட்டறிந்தது.
32. பெரியாழ்வார், மு.கா.ப.
33. புலவர் குப்புராசு, கி.ஆ., (65) புலியகுளம், கோவை.
34. இடும்பன் கோயில் பூர்வீகச் செப்புப்பட்டயம். ஜூலை - மள்ளர் மலர் - 1998, ப - 21.
35. புலவர் செந்துறைமுத்து, தமிழர் நாகரீகம் வரலாறும் பண்பாடும் ப - 161.

இயல் - 3

# சமூக அரசியல் எழுச்சி

இன்றைய கால கட்டத்தில் இச்சமூகம் பெற்றுள்ள சமூக எழுச்சியையும் அரசியல் எழுச்சியையும் தேவேந்திர குல வேளாளர் சங்கங்களின் தோற்றத்தின் தொடக்க காலம் அதற்காகப் பாடுபட்ட பெரியோர்கள் என்பதாகவும் 1970 களில் ஏற்பட்ட சங்கங்களின் தோற்றமும் சமூக எழுச்சியும் என்பதாகவும் இவ்வியல் மதிப்பிடுகின்றது. மேலும் தேவேந்திரர்களின் இக்கால அரசியல் மற்றும் சமூக எழுச்சியையும் சுருக்கமாக இவ்வியல் ஆராய்கின்றது.

## சமூக எழுச்சியின் தொடக்க காலம்

நாயக்கர் ஆட்சியில் வீழ்த்தப்பட்ட இம்மக்களில் பலர் வேளாண் நிலங்களை இழந்தார்கள். இதனால் விவசாயக் கூலிகளாக ஆக்கப்பட்டனர். மாறிமாறி வந்த நாயக்கர் ஆட்சி, இசுலாமியர் படையெடுப்பு, ஆங்கிலேயர்கள் ஆட்சிக் காலங்களில் இவர்கள் தமிழகம் முழுவதும் சிதறடிக்கப்பட்டனர். "இதற்கான காரணம் இம்மக்களுக்கு இம்மண்ணின் மீதிருந்த ஆட்சி உரிமையும் வீர மனோபாவமும் நிலவுடமையும் ஆகும்" என்பர்[1].

"அன்றைய ஆட்சியாளர்களுக்கு விசுவாசிகளாக இருந்த பல சமூகங்களுக்கு இம்மக்களின் நிலங்கள் தாரை வார்க்கப்பட்டதை பாளையப்பட்டு ஆட்சி முறை தெளிவாகக் காட்டுகின்றது[2]" இது இம்மக்களுக்கு எதிராக அன்று நிலவிய அரசியல் சமூகச் சூழல் ஆகும்.

தென் மாவட்டங்களில் முதன்மை நிலவுடைமையாளர்களாக அதாவது அதிகமான நிலங்கள் தேவேந்திரர்களிடமே இருந்ததை ஆங்கிலேயர் கால நில அளவைப் புள்ளி விபரக்கணக்கு தெரிவிக்கின்றது[3]. கொங்கு மண்டலங்களில் நிலத்தைப் பெரிதும் உடைய பண்ணாடிகளாகவே தேவேந்திரர்கள் குலப்பட்டம் தரித்து வாழ்ந்து வந்திருப்பதைக் காணமுடிகின்றது. "ஆனால் இம்மக்கள் தென் மாவட்டங்களில் மறவர்களின் நெருக்கடிக்கு ஆளாயிருந்தனர்[4]. இதன் உச்சக்கட்டமாக 1930 ஆம் ஆண்டு டிசம்பரில் இராமநாதபுரம் மறவர்களால் ஆதிதிராவிடர் மீது எட்டுக்கட்டளைகள் பிறப்பிக்கப்பட்டன. அவர்களின் தானியங்கள் மற்றும் சொத்துக்கள் அழிக்கப்பட்டன. கால்நடைகள் கொள்ளையிடப்பட்டன. இக்கட்டளைகளை மீறியவர்களின் குடிசைகள் தீயிடப்பட்டன. இதே எட்டுக்கட்டளை 1931 சூன் மாதத்தில் ஆதிதிராவிடருடன் சேர்த்து தேவேந்திரர்களுக்காக 11 கட்டளைகளாக

மாற்றிச் செயல்படுத்த முனைந்தனர். இவற்றைத் தேவேந்திரர்கள் செயல்படுத்தாததால் வன்முறைகள் விளைந்தன என்று ஜே.எச்.ஹட்டன் (J.H.Hutton) குறிப்பிடுவார். அவைகளில் சில வருமாறு "செருப்பு அணியக்கூடாது, முழங்காலுக்குக் கீழே வேட்டி கட்டக்கூடாது, பெண்கள் இரவிக்கை அணியக்கூடாது, நிலம் வைத்துக் கொள்ளக்கூடாது, விவசாயம் செய்யக்கூடாது, அப்படிச்செய்தால் கொள்ளையடித்துக் கொள்ளலாம், நிலங்களைக் குறைந்த விலைக்கு மிராசுகளுக்கு விற்றுவிட வேண்டும் என்பதான பதினோரு கட்டளைகள் பிறப்பிக்கப்பட்டன[5]. இதைச் செயல்படுத்தாதவர்கள் மீது தாக்குதல்கள் நடந்தன. இதனை எதிர்த்து அன்றுமுதல் இன்றுவரை ரத்தத்திற்கு ரத்தம், கண்ணுக்குக்கண், உயிருக்கு உயிர் என்று ஈடுகொடுத்துப் போராடி வருபவர்கள் தேவேந்திரர்கள்[6]" ஆவர். இவ்வாறான தொடக்க காலச் சமூக எழுச்சிக்கு வித்திட்டவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் பேரையூர் பெருமாள் பீட்டர், இமானுவேல் தேவேந்திரர், தேக்கம்பட்டி பால சுந்தரராசு, எஸ்.சி.பாலகிருஷ்ணன், தொண்டு வீராசாமி, உழியர் சத்தியமூர்த்தி, மேலக்கால் வீரபத்திரன் போன்ற சமூகத் தலைவர்கள் ஆவர்.

1935 வாக்கில் வெள்ளைக்காரர்களால் உருவாக்கப்பட்ட அட்டவணை சாதிப்பட்டியலில் (Scheduled Castes) இம்மக்களும் சேர்க்கப்பட்டதே இவர்களின் நிலையான வீழ்ச்சிக்குக் காரணம் என்று சொல்லப்படுகின்றது. பொருளாதாரத்தில் நசுக்கப்பட்டவர்களையும் சாதியத்தால் ஒடுக்கப்பட்டவர்களையும் ஒன்று சேர்த்து அட்டவணை சாதிகள் என்று உருவாக்கி அன்றைய அரசாங்கம் "Depressed Class" என்றவாறு ஆட்சித்துறை வசதிக்காகப் பெயர் சூட்டியது. இவ்வாறான பிரிப்புப் பொருளாதாரச் சலுகைக்காகவே தவிர சாதிய நோக்கில் பிரிக்கப்படவில்லை. ஆனால் மகாத்மாகாந்தி இவர்களை "அரிசன்" என்று அழைத்ததால் செட்யூல்டு இனம் முழுமையும் ஒரு சாதி என்ற கருத்து நிலைத்தது செட்யூல்டு இனத்தில் தமிழகத்தில் 76 சாதிகள் இருக்கின்றனர். இந்திய அளவில் 1060 சாதிகள் இருக்கின்றனர் என்ற உண்மை மறைக்கப்பட்டு அரசியல், இலக்கியம், பண்பாடு என்றவாறு அனைத்துத் தளத்திலும் அரிசன் என்றால் ஒரு சாதிதான் என்று திட்டமிட்டு பல தேசிய இனங்களின் தனித்தன்மையை அழித்தார்கள். இவ்வாறு வந்து சேர்ந்துதான் தாழ்த்தப்பட்டவர் என்ற பட்டம் என்பார் பெ.தங்கராஜ்[7]. 1935ல் செட்யூல்டு கேஸ்ட் என்ற சொல்லும் அரிசன் என்ற சொல்லும் ஏற்படும் வரை தேவேந்திரகுல வேளாளர் தங்களுக்குரிய சாதிப்பெயர்களாலேயே குடும்பனார், தேவேந்திர குலத்தார், காலாடி, பலகனார், கடையனார் என்று அழைக்கப்பட்டிருப்பதை இம்மக்களின் பத்திரப்பதிவுகள், கோயில் உரிமைச் செப்பேடுகள், கல்வெட்டுக்கள் மூலம்

அறியமுடிகிறது. இதற்குக் காட்டாக 1922ம் ஆண்டு வாக்கில்[8] இராமநாதபுரம் மாவட்டத்தில் தேவேந்திர குல வேளாளர் முன்னேற்றத்திற்காக "பூவைசிய இந்திரகுலசங்கம்" எனும் பெயரில் பெருமாள் பீட்டர் என்பவரால் தொடங்கப்பட்ட சங்கத்தைச் சொல்லலாம்.

## பேரையூர் பெருமாள் பீட்டர்

1922 ஆகஸ்ட் 9ம் தேதி "பூவைசியஇந்திரகுல" சங்கம் தொடங்கப்பட்டது. இதன் தலைவராகப் பேரையூர் பெருமாள் பீட்டர் என்பவர் இருந்துள்ளார். இச்சங்கம் 1922 ஆகஸ்ட் 16ல் மதுரையில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இச்சங்கத்தில் 150 சங்கங்கள் இணைந்து செயல்பட்டன. இதன் முதல் மாநாடு முதுகுளத்தூர் தாலுகா செங்கோட்டைப்பட்டியில் நடந்தது. இரண்டாவது மாநாடு எங்கு நடந்தது என்று தெரியவில்லை. மூன்றாவது மாநாடும் செங்கோட்டைப்பட்டியிலேயே 1923 ஜுன் 6ம் தேதி நடந்தது[9]. இச்சங்கம் மாநாடு நடத்தியும், பள்ளிக்கூடங்கள் நடத்தியும், மருத்துவ மனைகள் நிறுவியும் தேவேந்திர குல மக்களிடம் எழுச்சியூட்டி வந்ததாக அறிகிறோம். இச்சங்கத்துடன் இணைந்து பெருமாள் பீட்டரின் நண்பராக விளங்கிய பரமக்குடியைச் சேர்ந்த இம்மானுவேல் தேவேந்திரரின் அக்காலச் செயல்பாடும் அவரின் கொலையும் தேவேந்திரர்களிடம் பெரிய சமூக எழுச்சியை உண்டாக்கியது.

## இம்மானுவேல் தேவேந்திரர்

இராமநாதபுரம் மாவட்டம் பரமக்குடி தாலுகா செல்லூரைச் சேர்ந்த இம்மானுவேல் தேவேந்திரர் வெள்ளையனே வெளியேறு இயக்கத்தில் ஈடுபட்டு 3 மாதம் சிறைத்தண்டனை பெற்ற தியாகி. தேசப் பணிக்காக 1945 முதல் 1952 வரை இந்திய இராணுவத்தில் அவில்தாராகப் பணியாற்றிவிட்டு அதன் பின்பு தேவேந்திரர் சமூக விடுதலைப் போராட்டக் களத்தில் இறங்கியவர். இவர் குறித்து பி.மருதையா எம்.பி தமது அறிக்கையில் பின்வருமாறு குறிப்பிடுவார். "இம்மானுவேல் தேவேந்திரர் இராமநாதபுரம் மாவட்ட தேவேந்திரர் சங்க அங்கத்தினராகவும், முதுகுளத்தூர் வட்டார தேவேந்திர சங்கச் செயலாளராகவும் இருந்து தேவேந்திர மக்களிடையே கிராமம் கிராமமாகச் சென்று சங்கங்கள் அமைத்தும் மாநாடுகள் நடத்தியும் அம்மக்களின் அன்பையும் ஆதரவையும் பெற்றார். இராமநாதபுரம் மாவட்டத்தில் அவர் தேவேந்திரர்களின் தலைவராகவும் விளங்கினார். அவர்களின் வளர்ச்சிக்கும் ஒற்றுமைக்கும் இம்மானுவேல் தேவேந்திரர்தான் காரணம் என்பது எல்லோருக்கும் தெரியும்[10]" என்பார். இவ்வாறு தேவேந்திரர்களின் சமூக எழுச்சிக்காகப்

பாடுபட்டு வந்த இம்மானுவேல் 11-9-57 ஒரு பொதுக்கூட்டத்தில் பேசி விட்டு வரும் பொழுது தமது 33வது வயதில் ஆதிக்க சாதியினரால் கொலை செய்யப்பட்டார். இதன்பின்பு ஏற்பட்ட கலவரம் தென் தமிழகம் முழுமையையும் பாதித்தது. இக்கலவரம் 17 நாட்கள் தொடர்ந்து மறவர்களுக்கும் தேவேந்திரர்களுக்கும் நடந்தது. “இக்கலவரத்தில் கொல்லப்பட்டவர்கள் 38 பேர். அவர்களில் மறவர்கள் 8 பேர், தேவேந்திரர்கள் 17 பேர், துப்பாக்கிச் சூட்டில் பலியான மறவர்கள் 13 பேர்[11]. இம்மானுவேல் தேவேந்திரரின் கொலையையும் அதையொட்டி நடந்த கலவரங்களையும் கண்டித்து நாடு முழுவதும் கண்டனக் கூட்டங்கள் நடைபெற்றன. இதன் பின்னர் ஏற்பட்ட அரசியல் மற்றும் சமூக மாற்றங்கள் தேவேந்திரர்களை அரசியல் ரீதியாகச் சிந்திக்க வைத்தது என்றால் மிகையாகாது. இம்மானுவேல் மரணத்தால் அவர் தேவேந்திரர்களின் தெய்வமாக்கப்பட்டார். இதனை இம்மானுவேல் கதைப்பாடல் வருமாறு குறிப்பிடும்,

> “தெய்வமாக ஆகிவிட்டார்
> தேவேந்திர குலத்தார்க்கே”. [12]

இம்மானுவேல் தேவேந்திரரின் வீரமரணநாளை அதாவது 11-9-57 நாளை சமூக எழுச்சி நாளாக இம்மக்கள் இன்று வரை கொண்டாடி வருகின்றனர். இவரின் பெயரால் மாவட்டம் மணிமண்டபம் அமைக்கப்பட வேண்டுமென்று இம்மக்களால் கோரிக்கைகள் வைக்கப்பட்டன. இப்பகுதியில் இவரின் பெயரால் செயல்பட்டு வரும் “தியாகி இம்மானுவேல் பேரவை” “இம்மானுவேல் தேவேந்திரர் நினைவுக் கலைக்குழு” போன்ற அமைப்புகள் இம்மக்களின் சமூக அரசியல் எழுச்சிக்கு வித்திட்டன என்றும் சொல்லலாம். இம்மானுவேல் கலைக்குழுவினர் பாடும்

> “ஆயிரம் காலம் அடிமை என்றாலே!
> அரிசனென்று பேருவைக்க யாரடா நீயே!”

என்று தொடங்கும் பாடலுக்கு மக்கள் விண்ணதிர கைதட்டி ஆரவாரிக்கும் சமூக எழுச்சியை இன்றும் காணமுடிகின்றது.

### தேக்கம்பட்டி பாலசுந்தரராசு

1926 வாக்கில் மதுரை மாவட்டத்தில் தேவேந்திரகுல வேளாளர் சங்கத்தை நிறுவியவர். இந்தியாவிலேயே சாதிக் கொடுமை ஒழிய தனியே படை (இராணுவம்) வைத்து நடத்தியவர். சமூக ஒடுக்கு முறையை நேருக்கு நேர் சந்தித்துப் போராடியவர். இவர் தேனி மாவட்டம் கண்டமனூர் அருகிலுள்ள தேக்கம்பட்டியில் பிறந்தவர். இவரின் கீழ் எப்பொழுதும் 150க்கும் மேற்பட்ட இளைஞர்கள் எப்பொழுதும் சாதி ஆதிக்கத்தை

எதிர்த்துப் போராடத் தயார் நிலையில் இருப்பாராம். 1946ல் மதுரை விக்டோரியா மன்றத்தில் தேக்கம்பட்டி பால சுந்தரராசு தலைமையில் அம்பேத்கர் அவர்களுக்கு நடந்த வரவேற்புக் கூட்டத்தில் அம்பேத்கர் பேசிய ஆங்கில உரையை தேக்கம்பட்டி பாலசுந்தரராசு அவர்களே தமிழில் மொழி பெயர்ப்புச் செய்தார். 1930 வாக்கில் இராமநாதபுரம் மறவர்களால் விதிக்கப்பட்ட 11 சமூகத்தடைகளுக்கு எதிராகத் தேவேந்திரர்கள் தேக்கம்பட்டி பாலசுந்தரராசு தலைமையில் போராடி வருவதை அம்பேத்கர் பாராட்டிப் பேசினார்[13]." இத்தகைய பாராட்டுப் பெற்ற தேக்கம்பட்டி பாலசுந்தரராசு மதுரை ஜில்லாபோர்டு உறுப்பினராக இருந்து பல சமூகப் பணிகள் ஆற்றியவர். ஈ.வே.பெரியாருடன் நட்புக் கொண்டிருந்தார், தென்னாட்டுச் ஜின்னா என்றும் அடிமை விலங்குடைத்த அலெக்ஸாண்டர் என்றும் இவரை மக்கள் அழைத்தார்கள். இவர் 1952ல் திடீரென மரணமுற்றபின்பு இவர் தொடங்கிய தேவேந்திர குலவேளாளர் சங்கத்தின் தலைவராகத் திருச்சி பெ.பழனிச்சாமி பொறுப்பேற்றார்.

இக்கால கட்டத்தில் குறிப்பாக 1952 வாக்கில் காங்கிரஸ் கட்சியின் சார்பில் எம்.பி.யாகப் பணிபுரிந்த ஆயக்குடி எஸ்.சி.பாலகிருஷ்ணன், பி.மருதையா மற்றும் உழியர் சத்திய மூர்த்தி, ஆகிய காங்கிரஸ் பிரமுகர்கள் திராவிடர் கழகத்தில் பங்குபெற்று பிறகு விலகிய தொண்டு வீராச்சாமி, தேவேந்திரகுல வேளாளர் சமூக வளர்ச்சிக்காகப் பணியாற்றியவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர்.

### தேவேந்திரர் சமூகமும் பத்திரிக்கைகளும்

தமிழகத்தில் அனைத்துச் சமூகங்களுக்கும் அதன் நலனைக் கட்டிக் காப்பதற்காகச் சமூக இதழ்கள் தோன்றியது போலவே தேவேந்திரகுல வேளாளர்களின் சமூக நலனைக் கட்டிக்காப்பதற்கும் மக்களிடம் விழிப்புணர்ச்சியையும் சமூக எழுச்சியையும் தோற்றுவிக்கப் பல பத்திரிக்கைகள் தோன்றின. 1956ல் காங்கிரஸ் பிரமுகர் ஊழியர் சத்தியமூர்த்தி தொடங்கிய "சமத்துவமுரசு" பத்திரிக்கை அக்கால கட்டத்தில் தேவேந்திரர்களின் சமூக விடுதலைக்காகக் குரல் கொடுத்தது. இம்மானுவேல் தேவேந்திரரின் மரணத்திற்குப் பின்னால் 1957ல் நாடாளுமன்ற உறுப்பினர் மருதையா தொடங்கி நடத்திய "பாட்டாளி" எனும் பத்திரிக்கை ஆதிக்க சாதிகளுக்கு எதிராகப் பல செய்திகளை வெளியிட்டதற்காக அலுவலகம் அடித்து நொறுக்கப்பட்டதாக அறியமுடிகிறது. 1961-62ல் ஆர்.பி.கே. அப்பன் "இடிமுழக்கம்" மாத இதழையும் டாக்டர். டி.டி.ராசன் ''உழவன்'' மாத இதழையும் நடத்தினார்கள். திருச்சி சுப்பிரமணியன் இந்திரன் குரல், பள்ளர்குரல் பத்திரிக்கையை 1983 வாக்கில் நடத்தினார்[14]. திருநெல்வேலியிலிருந்து

வெளிவரும் "மருதமலர்" உமாசங்கர் என்பவரால் 20 ஆண்டுகளுக்கு மேலாக வெளியிடப்பட்டு வருகின்றது. சென்னையிலிருந்து வெளிவரும் "பாட்டாளி முழக்கம்" மாத இதழ் பேராசிரியர் பெ.தங்கராசு அவர்களால் 1993லிருந்து தொடர்ந்து வெளிவருகின்றது. 1995 சனவரி முதல் "மள்ளர் மலர்" மாத இதழ் கோவையிலிருந்து டாக்டர் குருசாமிசித்தர் அவர்களால் வெளியிடப்பட்டு வருகின்றது.

தற்சமயம் மருதமலர், பாட்டாளிமுழக்கம், மள்ளர்மலர், ஆகிய இதழ்கள் மாத இதழாகத் தொடர்ந்து வெளிவருகின்றன. இவற்றில் மள்ளர் மலரில் தேவேந்திரகுல வேளாளர்களில் தனித்த சமூகப் பண்பாட்டு மரபுகளை வெளிக் கொண்டு வரும் கட்டுரைகள் தொடர்ந்து இடம் பெற்று வருகின்றன. இத்துடன் தேவேந்திரர்களுக்கான தனித்த அரசியல் சிந்தனைகளையும் இவ்விதழ் தொடர்ந்து வெளியிட்டு வருகின்றன. 1996 வாக்கில் டாக்டர் க.கிருஷ்ணசாமியால் வெளியிடப்பட்ட "தேவேந்திரர் செய்தி மடல்" எனும் பத்திரிக்கை மூன்று இதழுடன் நின்று போனது. இவ்வகையில் தேவேந்திரகுல வேளாளர்களின் சமூகம் மற்றும் அரசியல் எழுச்சிக்கு இச்சமூகம் சார்ந்த சமூகப் பத்திரிக்கைகளும் பெரிதும் துணை நின்று வருகின்றன எனலாம்.

**சங்கங்களின் தோற்றமும் சமூக எழுச்சியும்**

தேவேந்திரகுல வேளாளர் சங்கங்களின் தோற்றம் 1922 வாக்கிலிருந்தே காணப்பட்டாலும் இந்தியா சுதந்திரம் அடைந்த பின்னர் அதாவது 1970க்குப் பின்னர் ஏற்பட்ட கல்வியறிவும், பொருளாதார வளர்ச்சியும் இம்மக்களின் தனித்த சமூகச் சிந்தனைக்கு வித்திட்டன என்றால் மிகையாகாது. 1970க்குப் பின்னால் தமிழக முழுமையும் அங்கொன்றும் இங்கொன்றுமாகத் தோன்றிய சமூகத் தலைவர்களும் அவர்கள் தோற்றுவித்த சாதிச் சங்கங்களும் இம்மக்களைச் செட்யூல்டு இனத்திலிருந்து வேறுபடுத்தி அநீதிக்கு எதிராகப் பேராடும் போராட்டச் சமூகமாக மாற்றியது.

1973ல் சென்னை நகரில் தேவேந்திர குல வேளாளர் சமூகத்தைச் சேர்ந்த மத்திய மாநில அரசு ஊழியர்கள் சேர்ந்து சகோதர சங்கம் (Brothers Association) எனும் அமைப்பைத் தொடங்கினர். இதன் தலைவராக 1973லிருந்து பி.சுந்தரராசு என்பவர் இருந்து வருகின்றார். இச்சங்கம் 1992 முதல் "தேவேந்திரர் பேரவை" எனும் பெயரில் அரசியல் இயக்கமாக மாறியுள்ளது. இதே காலக்கட்டத்தில் தஞ்சாவூரில் "மூவேந்தர் பண்பாட்டுக் கழகம்" அறிஞர் தேவ ஆசீர்வாதம் அவர்களால் தொடங்கப்பட்டது. இவ்வமைப்பு சார்பில் வெளிவந்த தேவ ஆசீர்வாதம்

எழுதிய "பள்ளர் அல்ல மள்ளர் ஆம் மன்னர்", "மூவேந்தர் யார்", "வேளாளர் யார்" ஆகிய நூல்கள் இம்மக்களின் மறைக்கப்பட்ட மூவேந்தர் வரலாற்றைக் கண்டறிந்து சொல்லியது.

1983 முதல் திருச்சியில் பி.சுப்பிரமணியனைத் தலைவராகக் கொண்டு செயல்பட்டு வரும் "தமிழ்நாடு தேவேந்திர குல வேளாளர் சங்கம்" திருச்சி மற்றும் தென் மாவட்டங்களில் சமூக எழுச்சியை ஏற்படுத்தியது. இதே 1980 வாக்கிலிருந்து தேவகோட்டை டாக்டர் சுப்பிரமணியம் தலைமையில் செயல்பட்டு வரும் தேவேந்திர குல வேளாளர் சங்கமும் குறிப்பிடத்தக்கதாகும். 1989க்குப் பின்னர் அதாவது போடிக்கலவரத்திற்குப் பின்னர் ஜான்பாண்டியன் தலைமையில் நெல்லையிலிருந்து செயல்பட்டு வரும் "அகில இந்திய தேவேந்திரகுல வேளாளர் முன்னேற்ற சங்கத்தின்" கிளைகள் தமிழகம் முழுவதும் பரவலாகத் தோன்றின. இவ்வமைப்பு சார்பில் 18-6-1995ல் தஞ்சையில் நடைபெற்ற மாநாட்டில் 5 லட்சம் தேவேந்திரர்கள் கூடினர். இவ்வமைப்பினர் தேவேந்திரர்களுக்கு எங்கெல்லாம் பிரச்சினைகள் தோன்றுகிறதோ அங்கெல்லாம் சென்று பிரச்சினைகளை நேருக்கு நேர் சந்தித்தனர். இவ்வாறான ஜான்பாண்டியனின் அரசியல் வருகை குறித்து செ.சண்முகபாரதி வருமாறு குறிப்பிடுவார். "1989 ஆம் ஆண்டு போடியில் நடந்த சாதிக்கலவரத்தைத் தொடர்ந்து ஏற்பட்ட ஜான்பாண்டியனின் அரசியல் வருகை இராமநாதபுரம் மாவட்டத் தேவேந்திரர்களை வெகுவேகமாக நிமிரச் செய்தது. அது வரை சமூக இழிவின் காரணமாகக் கூனிக் குறுகிக் கொண்டிருந்த மக்கள் "தேவேந்திரர்" என்ற பெயரில் சமூகம் மற்றும் அரசியல் மறுமலர்ச்சி பெற்றனர்"[15] என்று கூறுவதற்கேற்ப ஜான்பாண்டியனின் துணிச்சல் மிக்க செயல்பாடுகளால் தமிழகம் முழுமையும் உள்ள தேவேந்திரர்கள் சமூக எழுச்சி பெற்றனர் என்றால் மிகையாகாது.

கோவையில் 25-8-1991-ல் டாக்டர் குருசாமிசித்தரைத் தலைவராகவும் இன்ஜினியர் மனோகரமள்ளரைச் செயலாளராகவும் கொண்டு செயல்பட்ட "தேவேந்திர மன்றம்" "தேவேந்திரர்களின் கல்வி, பொருளாதார, சமூக உயர்வே எமது குறிக்கோள்" எனும் தாரக மந்திரத்தைக் கொண்டு செயல்பட்டு தேவேந்திரர்களின் தனித்த பண்பாடுகளையும், சமூகப் பெருமைகளையும் வெளிக்கொண்டு வர பல்வேறு அமைப்புகளைத் தோற்றுவித்தது. இம்மன்றம் சார்பில் டாக்டர் குருசாமிசித்தர் வெளியிட்ட "தமிழிலக்கியத்தில் பள்ளர் (மள்ளர்) தேவேந்திர குல வேளாளர் எனும் நூல் இம்மக்களின் மள்ளர் மரபை மீட்டுருவாக்கம் செய்து எழுச்சியூட்டியது. 1993 ஏப்ரல் முதல் வாரத்தில் டாக்டர் குருசாமி சித்தரின் தலைமையில்

"தேவேந்திரகுல வேளாளர் சங்கம்" தொடங்கப்பட்டது. இச்சங்கம் பல முயற்சிகள் செய்து 3-4-1993ல் கோவை மருதூர் திருமண மண்டபத்தில் தமிழகம் முழுமையும் சிதறிக்கிடந்த 300க்கும் மேற்பட்ட சங்கங்களை இணைக்கும் முயற்சியாகத் தேவேந்திரகுல வேளாளர் சங்கங்களின் ஒருங்கிணைவுக் கூட்டத்தை நடத்தியது[16]. இவரே 1995 வாக்கில் தோற்றுவித்த "தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம்" இம்மக்களின் பண்பாட்டு மரபுகளை மீட்டுருவாக்கம் செய்யும் பணியில் ஈடுபட்டு வருகின்றது. இதன் கிளைகளாகப் பல அமைப்புகள் "மள்ளர் இலக்கியப் பேரவை" எனும் பெயரில் செயல்பட்டு வருகின்றன.

1990 வாக்கில் "தேவேந்திர குல வேளாளர் இளைஞர் அணி" எனும் அமைப்பைத் தென் மாவட்டங்களில் கிராமந்தோறும் தோற்றுவித்து சமூக அரசியல் விழிப்புணர்வை ஏற்படுத்தி வரும் பசுபதிபாண்டியன் இங்கு குறிப்பிடத்தக்கவர் ஆவார். 1993ல் 19 தேவேந்திர குல வேளாளர் சங்கங்கள் சேர்ந்து தேவேந்திர குல வேளாளர் கூட்டமைப்பு" எனும் அமைப்பை உருவாக்கி அதன் தலைவராக டாக்டர் க.கிருஷ்ணசாமி நியமிக்கப்பட்டார். இவ்வாறு 1989க்கு மேல் ஜான்பாண்டியன் தலைமையிலும் 1991க்கு மேல் டாக்டர் குருசாமிசித்தர் தலைமையிலும் 1993க்குப் பின்னர் டாக்டர் க.கிருஷ்ணசாமி தலைமையிலும் தமிழகம் முழுமையிலும் உள்ள தேவேந்திரகுல வேளாளர்கள் அணிதிரளத் தொடங்கினர். இம்மூவரின் வருகை தேவேந்திரர்களை அரசியல் ரீதியாகவும் சமூக ரீதியாகவும் தனித்துச் சிந்திக்க வைத்துள்ளன. இம்மூவரின் தனித்த இயக்கங்களுக்கான கிளைகள் தமிழகக் கிராமங்கள் தோறும், இறுக்கமாகக் காணப்படுகின்றன. இவ்வமைப்புக்கள் நடத்தும் மாவட்ட, மாநில மாநாடுகள், பொதுக்கூட்டங்கள், கிளைத்திறப்பு விழாக்கள், இன எழுச்சிக் கொள்கை விளக்கக்கூட்டங்கள் முதலியவற்றால் எழுச்சி பெற்றுள்ள இம்மக்கள் தேவேந்திரர்களுக்குத் தலைவர் தேவேந்திரரே என்பதாகத் தலைமையின் கட்டளையை ஏற்று சிறந்த அமைப்பாகச் செயல்பட்டு வருவதைப் பார்க்க முடிகின்றது.

## அரசியல் எழுச்சி

"காங்கிரஸ் கட்சியில் பிராமணர்களின் ஆதிக்கம் இருந்ததன் காரணமாக இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பிராமணரல்லாதார் இயக்கமாக நீதிக்கட்சி உருவானது. இக்கட்சியில் பிராமணரல்லாத செல்வந்தர்களும் கல்வியாளர்களும் இடம் பெற்றிருந்தனர். பிற்படுத்தப்பட்டோரின் மேம்பாடு குறித்தே இக்கட்சி செயல்பட்டது"[17]. "அம்பேத்கர் தமிழகத்தில் நீதிக்கட்சியின் வரவேற்பு விழாவின் ஏற்புரையில் பேசும் போது பிராமணரல்லாத சமூகத்தின் பெயரால் ஆட்சிக்கு வந்த

நீதிக்கட்சியினர் செட்யூல்டு இனமக்களை மறந்துவிட்டனர் என்று குற்றம் சாட்டினார். பிராமண ஆதிக்கத்தை எதிர்க்கும் போது இச்சாதியினருக்கு செட்யூல்டு மக்களின் ஆதரவு தேவைப்படுகிறது. ஆனால் இந்திய அரசியலில் வலுப்பெற்று வரும் இவ்வகுப்பினர் செட்யூல்டு இனத்தவர் தலைமைக்கும் அதிகாரத்திற்கும் வருவதை ஒரு போதும் ஏற்பதில்லை"[18]. அதாவது பிற்படுத்தப்பட்டோர் செட்யூல்டு இனத்தவரின் அரசியல் சமூக எழுச்சியை ஒரு போதும் ஏற்பதில்லை என்பதே அம்பேத்கர் கூறிய குற்றச்சாட்டு. இந்நிலை இன்றும் தொடர்கின்றது. இந்தியா சுதந்திரம் பெற்று 50 ஆண்டுகள் ஆகியும் தங்களுக்கான சமூக விடுதலை முழுமையாகக் கிடைக்காத நிலையில், அரசு அதிகாரத்தில் நேரடியாகப் பங்கு பெற தங்களுக்கான தனியான அரசியல் அமைப்பைத் தொடங்க வேண்டுமென்று முடிவு செய்து கடந்த மூன்று ஆண்டுகளா . டாக்டர் குருசாமிசித்தர், டாக்டர் கிருஷ்ணசாமி ஆகியோரின் அமைப்புகளில் அரசியல் இயக்கங்களாக அணி திரண்டுள்ளனர்.

1995 ஆகஸ்ட் 31ந் தேதி ஆதிக்க சாதியினராலும் போலீசாராலும் தாக்கப்பட்ட கொடியன்குளம் சம்பவத்திற்காக நீதி கேட்டு சென்னையில் டாக்டர் கிருஷ்ணசாமி தலைமையில் நடைபெற்ற தேவேந்திர குல வேளாளர் கூட்டமைப்பினரின் கண்டனப் பொதுக்கூட்டத்தினர் மீது காவல்த்துறை துப்பாக்கிச் சூடு நடத்தியது. இதில் இருவர் கொல்லப்பட்டனர். இதனைத் தொடர்ந்து தென் தமிழகத்தில் நடந்த கலவரங்கள் உயிரிழப்புக்கள் தேவேந்திரர்களை அரசியல் ரீதியாகத் தனித்துச் செயல்படத்தூண்டின. இதனை ஏ.வி.கே. மள்ளர் வருமாறு குறிப்பிடுவார். "இம்மக்களை கொடியன்குளம் கலவரம் தான் சரியான நோக்கிலே சிந்திக்க வைத்தது. அதற்கு முன்னால் நடந்த கலவரங்களெல்லாம் கையிக்கு கை, காலுக்குக்கால், ஒருதலைக்கு இருதலை என்றிருந்தாலும் அரசியல் கட்சிகளின் கொடிகளைக் கீழிறக்கியதென்பது தேவேந்திரர்களின் அரசியல் பாதையில் திருப்புமுனை[19] என்பர்.

28-10-1995 ஆம் நாள் மதுரை தமுக்கம் மைதானத்தில் டாக்டர் குருசாமி சித்தர் அவர்களால் தேவேந்திரர்களுக்கான தனித்த அரசியல் கட்சியாக "தமிழக முன்னேற்றக்கழகம்" தொடங்கப்பட்டது. இத்தொடக்க நாளில் நடைபெற்ற அரசியல் மாநாடும் பேரணியும் தான் அரசியல் ரீதியாகத் தேவேந்திரர்கள் ஒன்று திரண்ட முதல் மாநாடாகும். இம்மாநாட்டில் தேவேந்திரர்கள் நாயக்கர் ஆட்சிக் காலத்தில் இழந்து போன தமிழக ஆட்சியை தேவேந்திரர்களின் தலைமையில் வென்றாக வேண்டும். இவ்ஆட்சி ஒடுக்கப்பட்ட அனைத்துத் தமிழர்கள் ஏற்கும் ஆட்சியாக இருக்கும். ஆனால் இக்கட்சிக்குத் தேவேந்திரர்கள் மட்டுமே தலைமை ஏற்பார்கள் என்று இம்மாநாடு முடிவு செய்து தீர்மானம்

நிறைவேற்றியது[10].

கொடியன்குளம் நிகழ்ச்சியும், தமிழக முன்னேற்றக் கழகத்தின் தொடக்கமும் 1996 மார்ச் 6ந் தேதி டாக்டர் கிருஷ்ணசாமி மதுரையில் நடத்திய தேவேந்திர குல வேளாளர் கூட்டமைப்பின் முதல் மாநாடும் அதனைத் தொடர்ந்து ஏற்பட்ட ராஜபாளையம், மதுரைக் கலவரங்கள் தேவேந்திரர்களை அரசியல் ரீதியாக மேலும் தனித்துச் செயல்பட வழிவகுத்தன.

## தேவேந்திரர்களின் தனித்த அரசியல் எழுச்சி

1996 மே மாதத்தில் தமிழகத்தில் நடைபெற்ற சட்டமன்ற, நாடாளுமன்றத் தேர்தலில் டாக்டர் குருசாமிசித்தரின் தமிழக முன்னேற்றக்கழகம் 27 சட்டமன்றத் தொகுதிகளிலும் 5 நாடாளுமன்றத் தேர்தலில் போட்டியிட்டது. தேவேந்திரர்களின் தனித்த அரசியல் வரலாற்றில் தேர்தல் ஆணையத்தில் பதிவு செய்து முதன்முதலில் போட்டியிட்ட அரசியல்கட்சி தமிழக முன்னேற்றக்கழகமே ஆகும். ஜான்பாண்டியன் தலைமையிலான "அகில இந்திய தேவேந்திர குல வேளாளர் முன்னேற்ற சங்கமும்" 19 சட்டசபைத் தொகுதிகளில் தனித்துப் போட்டியிட்டனர். இதே போன்று "தேவேந்திர குல வேளாளர் கூட்டமைப்பின்" சார்பில் அதன் தலைவர் டாக்டர் கிருஷ்ணசாமியின் தலைமையில் 30 பேர்கள் சட்டசபைக்குப் போட்டியட்டனர். இதில் டாக்டர் கிருஷ்ணசாமி ஒட்டப்பிடாரம் தொகுதியில் போட்டியிட்டு வெற்றிபெற்று முதன்முதலில் தேவேந்திரர்களின் தனித்த அரசியல் குறியீடாகச் சட்டசபைக்குச் சென்றார். இதன்பின்னர் இவர் தலைமையில் தென் மாவட்டங்களில் ஒன்று திரண்ட தேவேந்திர குல வேளாளர்கள் வாழும் கிராமங்களில் பிற கட்சிகளின் கொடிகளே இல்லாமல் போகும்படி ஆயின.

இம்மக்களின் தனித்த அரசியல் எழுச்சியை ஒடுக்குவதற்கு ஆதிக்கசாதியினரால் செய்யப்பட்ட கலவரங்கள் குறிப்பாக கொடியன்குளம் கலவரம், சுந்தரலிங்கக் குடும்பனார் போக்குவரத்துக்கழகம் தொடர்பாக எழுந்த கலவரங்கள் தமிழகத்தில் சாதித்தலைவர்களின் பெயரால் மாவட்டம் மற்றும் போக்குவரத்துக்கழகங்களின் பெயர்களை நீக்குபடியான எழுச்சிப் போராட்டமாக மாறியது. இச்சமூக அரசியல் எழுச்சியின் மூலம் இச்சமூகம் பெரிய அளவான போராட்டங்களைத் தனித்து நடத்திக்காட்ட முடியுமென்று நிரூபித்தது. 1997 டிசம்பரில் டாக்டர் கிருஷ்ணசாமி "புதிய தமிழகம்" எனும் பெயரில் ஓர் அரசியல் இயக்கத்தைத் தொடங்கினார். இது ஒடுக்கப்பட்ட அனைத்து மக்களுக்குமானது என்று அறிவித்தார். இவ்வியக்கம் தொடங்கப்பட்டவுடன் 1998 வாக்கில் நடந்த நாடாளுமன்றத்

தேர்தலில் 19 தொகுதிகளில் தனித்துப் போட்டியிட்டு சில தொகுதிகளில் வெற்றி தோல்விகளை நிர்ணயம் செய்யும் அமைப்பாக உருவெடுத்துள்ளது குறிப்பிடத்தக்கது.

இவ்வகையில் தமிழகத்தில் நடைபெறும் சாதி ஆதிக்க அரசியலுக்கு எதிராகச் சாதி ரீதியில் அமைப்பாகத் திரண்டு தங்களுக்கு இருக்கும் மக்களின் வலிமையை அதாவது ஒன்றரைக் கோடிக்கு மேல் என்பதை நிரூபிக்க தேவேந்திரர்கள் தயாராகி வருவதை இம்மக்களின் அரசியல் எழுச்சி காட்டுகின்றது. இவ்வாறாக அரசியலில் வலுப்பெற்று அரசியலில் அதிகாரத்தைக் கைபற்றுவதன் மூலமே சமூக விடுதலையை முழுமையாகப் பெறமுடியும் என்று இம்மக்களின் தலைவர்களும் மக்களும் நம்புகின்றனர்.

## தொகுப்புரை

1. நாயக்கர் ஆட்சிக்காலத்தில் ஆட்சியுரிமையை இழந்து விவசாயக் கூலிகளான இவர்கள் 1925 வாக்கில் செட்யூல்டு இனப்பட்டியலில் சேர்க்கப்பட்டதன் மூலம் முழுவதுமாக ஒடுக்கப்பட்டுப் போனார்கள்.

2. தென் மாவட்டங்களில் இவர்களை ஒடுக்க முயலும் ஆதிக்க சாதியினருடன் தொடர்ந்து போராடி வருவதை இம்மக்களின் சமூக வரலாறு காட்டுகின்றது.

3. இந்தியச் சுதந்திரத்திற்கு முன்பும் பின்பும் இம்மக்களுக்காகப் பணியாற்றிய சமூகத்தலைவர்களில் பேரையூர் பெருமாள் பீட்டர், இம்மானுவேல், தேக்கம்பட்டி பாலசுந்ததரராசு ஆகியோர் குறிப்பிடத்தக்கவர் ஆவர்.

4. தமிழக அரசியலில் ஆதிக்கம் செலுத்தும் சாதி அரசியலில் இடம்பெற்ற அதே சாதி அரசியலை இம்மக்களும் கைக்கொண்டு தமிழக அரசியலை நிர்ணயம் செய்யும் ஆற்றமிகு அரசியல் சக்தியாக எழுச்சி பெற்று வருகின்றனர்.

5. இம்மக்களின் முப்பெரும் தலைவர்களில் டாக்டர். குருசாமிசித்தர் இம்மக்களுக்கான தனித்த அரசியலைத் தொடங்கியவராகவும், இம்மக்களின் மள்ளர் மரபைக் கண்டறிந்து சொல்லிய அறிஞராகவும் விளங்குகின்றார். ஜான் பாண்டியன் இம்மக்களின் வீரப்பண்பாட்டின் குறியீடாகக் கருதப்படுகிறார். டாக்டர். கிருஷ்ணசாமி ஒடுக்கப்பட்ட அனைத்து மக்களின் தலைவராகவும் தமிழக அரசியலில் செல்வாக்குமிக்க தலைவராகவும் உருமாறி வருகின்றார்.

6. தமிழகம் முழுமையையும் தேவேந்திர குல வேளாளர் சங்கங்களின்

கிளைகள் காணப்படுவது இம்மக்களின் சமூக எழுச்சியைக் காட்டுகின்றன.

7. தேவேந்திர குல வேளாளர்களின் சமூக அரசியல் எழுச்சிக்காகப் பாடுபட்டுவரும் சமூக இதழ்களில் மள்ளர்மலர், பாட்டாளி முழக்கம், மருதமலர் ஆகியன குறிப்பிடத்தக்கன ஆகும்.

## குறிப்புக்கள்


1. குருசாமிசித்தர், நேரடிப் பேட்டி மூலம் பெற்ற கருத்து நாள் 21-1-99.
2. அனுமந்தன், கே.ஆர். தேவேந்திரர்களை வீழ்த்துவதற்காக உருவாக்கப்பட்டதே பாளையப்பட்டு ஆட்சிமுறை (ஆங்கிலக்கட்டுரை) தமிழாக்கம் தங்கராசு பெ. பாட்டாளி முழக்கம், ஜுன்-1993.
3. சிவசுப்பிரமணியன், ஆ. நாட்டுப்புற வழக்காறுகளில் மள்ளர் குல வரலாறு, 13-12-1998, அறக்கட்டளைச் சொற்பொழிவு, தமிழர் பண்பாடு சமூக ஆய்வு மன்றம், கோவை.
4. சண்முகபாரதி, இம்மானுவேல் தேவேந்திரர் கதைப் பாடல் ஆய்வு, ப-7.
5. Hutton, J.H. Caste in India. Its Nature Function and Origin. PP-204-206.
6. மள்ளர், ஏ.வி.கே. மள்ளரும் சமூக விடுதலையும் ப-6.
7. தங்கராஜ், பெ. தேவேந்திரர்கள் சமூகம் கடந்து வந்த கரடு முரடான பாதை, பாட்டாளி முழக்கம், டிசம்பர் - 1993. ப-11.
8. பழனிச் செப்புப்பட்டயம், நத்தம் செப்புப் பட்டயம், போன்றனவும் இம்மக்களின் பழைய நில உரிமைப் பத்திரங்கள் ஆண், பெண் பெயர்கள் போன்றனவும் இதனை உறுதிப்படுத்தும்.
9. அலெக்ஸ், வே. கரிசலில் ஒரு ஊரணி. ப. - 20.
10. சண்முகபாரதி, செ. மு.கா.ப. ப-34.
11. மேலது ப-66
12. மேலது ப-9.
13. தங்கராஜ், பெ. மு.கா.ப. ப-8.
14. மேலது ப-10.

15. சண்முக பாரதி, செ. மு.கா.ப. ப-110.

16. டாக்டர் குருசாமி சித்தர் (58) தலைவர் மற்றும் நிறுவனர், தேவேந்திர குல வேளாளர் சங்கம் கோவை.

17. மள்ளர் மலர், ஜுலை 1996, ப-18

18. ஞானசேகரன், தே. ஒடுக்கப்பட்ட மக்கள், வெளியிடப்படாத ஆய்வுக் கட்டுரை.

19. மள்ளர், ஏ.வி.கே. மு.கா.ப. ப-20.

20. மள்ளர் மலர், நவம்பர் 1995-ப-3.

## பின்னிணைப்பு

## தேவேந்திரர்களின் தோற்றம் பற்றிய கதைகள்

### 1. தேவேந்திரன் கழியன் கதை

பரமசிவனும் பார்வதியும் மேலோகத்தில் அதிகாலையில் கிழக்கிலிருந்து மேற்காக உலகைச் சுற்றி வருகின்றனர். அப்பொழுது பார்வதிக்கு வியர்க்கிறது. வியர்வையைத் தனது கையால் வழித்துக் கீழே எறிகின்றாள். மறுபடியும் பொழுது சாயும் நேரம் மேற்கிலிருந்து கிழக்காக பார்வதியும் பரமசிவனும் வருகின்றார்கள். பார்வதி வியர்வையைத் துடைத்தெறிந்த இடத்தில் ஒரு குழந்தையின் அழுகுரல் கேட்கின்றது. பார்வதி சத்தம் வரும் திசை நோக்கிப் போக, பரமசிவனும் அங்கு வருகிறார். அங்கு வல்லக்கொடியின் மீது ஒரு குழந்தை அப்பொழுதுதான் பிறந்தது போன்று கிடக்க, சிவன் பார்வதியிடம் நீ துடைத்துப் போட்ட வியர்வை நமது குழந்தையாகி இருக்கிறது என்று சொல்லும் முன்னரே, தாய்ப்பாசத்தால் குழந்தையின் தொப்புள் கொடியை அறுத்துப் போட்டுவிட்டு தனது முந்தாணையில் மூடி எடுத்துச் செல்கின்றாள்.

இக்குழந்தை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வருகிறது. இக்குழந்தைக்குப் பார்வதியும் பரமசிவனும் 'கழியன்' என்று பெயர் சூட்டுகின்றனர். குழந்தையிலேயே அவன் சுறுசுறுப்புடன் வளர்ந்து வந்தான். அவன் வீட்டில் ஒருநாள் ஒரு நெல்மணியைக் கண்டெடுத்தான். அந்த நெல்மணியை வீட்டிற்குள்ளேயே யாருக்கும் தெரியாமல் சேற்றை (சிறிய வயல்) உண்டாக்கி நடுகின்றான். அந்த நெல் அஞ்சு, ஆறு நாற்றுக்களை உண்டாக்கியது. அதனை எடுத்து வேறு ஒரு இடத்தில் நடவு செய்கின்றான். அந்த நெல் நாற்றுக்கள் ஆறு மாதத்திற்குள் நன்றாக விளைந்து விடுகின்றன. இவ்வாறு விளைந்த நெல்லைக் கொண்டு ஆயிரம் ஆயிரம் நெல்லாகப் பெருக்கி, காடுகளை வயலாக்கி நெல் விளையும் விளைநிலமாக மாற்றுகின்றான்.

ஒருநாள் பார்வதி திருவரகன் (வரகுச்சோறு) சோறு சமைச்சுக்கிட்டு இருக்கும்போது; கழியன் கொஞ்சம் நெல்மணியிலிருந்து அரிசியைத் தொளித்து (பிரித்தெடுத்து) எடுத்து சோற்றுப்பானைக்குள் போட்டுவிடுகின்றான். பார்வதி திருவரகன் அரிசிச்சோறில் புழுக்கள் (அரிசிச்சோறு) போன்று ஏதோ ஒருவகைச் சோறு காணப்பட இதைச் செய்த கழியனைத் திட்டுகின்றாள். சுவாமி (சிவபெருமான்) வந்து சாப்பிடும் நேரத்தில் இப்படிச் செஞ்சுட்டியே என்று பார்வதி திட்ட சிவபெருமான் சாப்பிட வந்துவிடுகிறார். என்ன செய்வதென்று தெரியாமல் புழுப்போன்ற அரிசிச் சோற்றையே சிவனுக்குப் பார்வதி பரிமாறுகின்றாள். பார்வதியிடம் என்ன புழுவைப் பரிமாறுகின்றாய் என்று சிவன் கேட்க,

இல்ல கழியன் செஞ்ச வெள்ளாமையில் விளைஞ்சது என்று சொல்கின்றாள் பார்வதி. சிவன் கழியனையும் உடன் அழைத்து அரிசிச் சோற்றைச் சாப்பிடச் சொல்லி மிகவும் நன்றாக இருக்கிறதே இதை எங்க கண்டுபிடிச்ச என்று கேட்க. கழியன் தான் காடு கொண்டு வயலாக்கிய, ஆயிரம் ஆயிரம் நெல்வயல்களைக் காண சிவனை அழைத்துச் செல்கின்றான். பரமசிவன் காணவந்தபோது வயல்களில் நெல் நன்றாக விளைந்து காணப்பட்டது. உடனே சிவன் இப்படிக் கடுமையான வேலையை நீ ஒருவனா செய்கின்றாய் என்று கேட்க. எனக்கு வேலை செய்ய ஆள் கொடுத்தால் தான் இன்னமும் நன்றாக நெல் விளைச்சலை உண்டு பண்ணமுடியுமென்று சொல்கின்றான். உடனே சிவன் அப்படியா இப்ப இங்க ஐஞ்சு தேவலோகக் கன்னிகள் குளிக்க வருவார்கள். அவர்களில் ஒருத்திமேல் நீ மறைந்திருந்து சேற்றை அள்ளிவீசு. யார்மேல் சேறுபடுகிறதோ அவள் உன்னுடன் தங்கிவிடுவாள் என்று சொல்கிறார். கழியன் அதேபோன்று சேற்றை தேவலோகக் கன்னிகள் மீது எறிய சேறு இரு தேவலோகக் கன்னிகள் மீது பட்டுவிடுகின்றது. அவர்கள் இருவரும் இவனுடன் தங்கிவிடுகின்றனர்.

இரு பெண்களையும் அழைத்துக் கொண்டு கழியன் வீட்டுக்குவர, ஏன் ரெண்டு பெண்ணை அழைத்து வந்தாய் என்று கேட்க, ஒன்று வீட்டிற்கு இன்னொன்று காட்டிற்கு என்று கூறுகின்றான் கழியன். ஆமாம் நீங்கள் மூன்று பேர் ஆகிவிட்டதால் இனி நீங்கள் பூலோகத்தில்தான் வாழமுடியும். நீங்கள் பூலோகம் சென்று வெள்ளாமையைப் பெருக்கி, நெல்லை உலகத்துக்குக் கொடுங்கள் என்று சிவன் சொல்லி, அவர்களுக்கு வேண்டிய பொருட்களையெல்லாம் ஒரு சிமிலியில் அடைத்து இதைப் பூலோகம் சென்று திறந்து பாருங்கள் என்று மூவரையும் வழியனுப்பி வைக்கின்றார். இப்படியாக பூலோகம் வந்தவர்கள்தான் தேவேந்திர குல வேளாளர்கள். இவர்கள் மூலமாகத்தான் நெல் உலகம் முழுவதும் பரவியது.

தகவலாளர் : மாரியாயி

## 2. பூலோகத்தில் தேவேந்திரன் கழியன்

மேலோகத்தில் தேவ கன்னியர் இருவரை மனைவியாகப் பெற்ற கழியன். பூலோகம் வந்து நெல் மற்றும் நன்செய் பயிர்களை உலகம் முழுவதும் பயிர்செய்து உலகைச் செழிக்கச் செய்கின்றான். அன்றொரு சமயம் கலியுகம் வருகின்றது. மக்கள் வறுமையால் வாடுகின்றனர். பூலோகம் வந்த தனது மகன் கழியனைவும் மருமகள்கள் ஆகியோரைக் காண பூலோகம் வருகின்றனர் பார்வதியும் பரமசிவனும். தனது மகன் பூலோகத்தில் வேளாண்மை செய்து வாழ்வதைக் கண்டு மனம் மகிழ்ந்த பார்வதியும் பரமசிவனும் மேலோகம் சென்று விடுகின்றனர்.

பின்னொரு காலத்தில் உலகம் அழிகின்றது. கடுமையான மழை பெய்து உலகம் நீர்ப்பிரளயம் ஆகிறது. கழியனின் வழிவந்த மகனும் அவனது மனைவியும் ஒரு சுரைப்புரையில் (சுரைக்குடுக்கை) நுழைந்து தண்ணீரில் இறந்துவிடாமல் உயிர்தப்புகின்றனர். இவர்களின் வழிவந்தவர்களே இன்றைய தேவேந்திர குல வேளாளர்கள் ஆவர்.

தகவலாளர் : ராமசாமி

## 3. வடிவேலுக் குடும்பன் தோற்றம்

ஒரு புராணக் கதைப்படி ஒரு காலத்தில் இந்திரனின் வியர்வைத் தண்ணீரில் வளர்ந்திருந்த ஒரு செடியில் விழுந்ததாகவும், அதிலிருந்து ஒரு குழந்தை தோன்றியதாகவும், அக்குழந்தையே பள்ளர்களுக்கு மூதாதை எனவும் கூறுகிறது. அம்மூதாதையின் முதல் குடும்பன், வடிவேலுக் குடும்பன் வடிவேலுக்கு இரு மனைவிகள், முதல் மனைவிக்கு 4 குழந்தைகள் எனவும் இந்த நான்கு குழந்தைகளும் முறையே தேவேந்திர குடும்பன், தொட்டிய நாட்டுக் குடும்பன், பாண்டிய நாட்டுக் குடும்பன், கடயநாட்டுக் குடும்பன் ஆகிய நான்கும் மூதாதை ஆனார்கள் எனவும் இரண்டாம் மனைவிக்கு கொங்குப் பள்ளர், வேட்டைப் பள்ளர், கால்கட்டிப் பள்ளர், அத்திப் பள்ளர் ஆகிய நான்கு பள்ளர் பிரிவினர்க்கு மூதாதையாக நான்கு குழந்தைகள் பிறந்ததாகவும் புராணக்கதை கூறுகிறது.

தொகுப்பு : டாக்டர் ஆர்.கே. அனுமந்தன்,
தமிழாக்கம் : பேராசிரியர் பெ.தங்கராசு,
ஆதாரம் : பாட்டாளி முழக்கம், ஜூலை 1993.

## 4. குடும்பன் தோற்றக்கதை

ஈஸ்வரனும் ஈஸ்வரியும் ஏழை மக்களுக்குப் படியளந்து கொண்டிருக்கும் போது உலக மக்கள் எல்லாம் ஈஸ்வரன் காலில் விழுந்து வரம் கேட்டனராம். காலில் விழுந்தவர்கள் எல்லாம் வரமாக செல்வம், பொன், தங்கம் என கேட்டனர். குடும்பன் மட்டும் செந்நெல்லும் மண்வெட்டியும் வயலும் வரமாக கேட்டானாம். கேட்டவுடன் ஈஸ்வரன் மிகவும் சந்தோசப்பட்டு மூன்று வரத்தையும் கொடுக்கின்றார். அப்பொழுதிலிருந்து குடும்பமார்கள் நெல்லையும், நெல் விவசாயத்தையும் விடாமல் செய்து வருகின்றனர்.

பார்வதி (70)
தேவேந்திர குல வேளாளர்,
செம்பட்டி, திண்டுக்கல் மாவட்டம்.

## 5. தேவேந்திரன் கதை

தேவேந்திரனுக்கும் இந்திராணிக்கும் ஒரு குழந்தை பிறக்கின்றது.

அக்குழந்தையைப் பள்ளிக்கு அனுப்புகிறார்கள். ஆனால் அக்குழந்தை அப்பள்ளியில் படிக்காமல் குழிதோண்டி, தண்ணீர் பாய்ச்சி, உழவு செய்து விளையாண்டுகிட்டு இருந்தானா. இதைக் கேள்விப்பட்ட தேவேந்திரனும், இந்திராணியும் உனக்கு என்ன வேலை பிடிக்கும் என்று கேட்டனர். நான் உழவு வேலை செய்கிறேன் என்று சொல்ல, வேறு என்ன வேண்டும் என்று கேட்டனர். எனக்கு நாலு பெண்கள் வேலை செய்வதற்குத் துணைக்கு வேனுமென்று கேட்டான் உடனே போடா மடப்பயலே என்று சொன்னாராம். தேவேந்திரன் அன்றிலிருந்து உழுகிறதும், நெல் விதைக்கிறதும் மடைவேலைப் பார்பதும் இவனோட மக்களான தேவேந்திர மக்களுக்கு ஆகிப்போச்சாம்மா.

மணிகிட்டி (65)
தேவேந்திர குல வேளாளர்
செம்பட்டி, திண்டுக்கல் மாவட்டம்

## 6. நெல் வந்த கதை

பார்வதியும், பரமசிவனும் படியளந்து விட்டு ஓய்வாகத் தனியாக இருக்கும் போது ஆசைப்பட்டு கூடி விடுகின்றனர் அப்பொழுது உண்டான கருவை தாமரை தடாகத்தில் அல்லி வல்லைக் கொடியில் போடுகிறாள். அது குழந்தையாக வளர்ந்துக்கிட்டு இருக்கிறது.

அந்தக் குழந்தையின் அம்மா குளிக்கும் போதெல்லாம் அவகுளிக்கிற தண்ணியில் வயல் மாதிரி பாத்திகட்டி தொளிக் கலக்கி விளையாண்டுகிட்டு இருந்துச்சா அப்பொழுது தெய்வலோகத்திலிருந்து வந்த அன்னப் பச்சிகள், அந்த வயலில் தன் வாயில் கொண்டு வந்த் நெல்லைக் கக்கிவிட்டுப் போய்விட்டதாம்.

உடனே அந்தக்குழந்தை அவங்க அம்மா பார்வதியைக் கூப்பிட்டு காமிச்சுச்சா. உடனே பார்வதி இதுதா நெல்லுண்ணு சொல்லி தன் மகனுக்குச் சொன்னாளாம்.

அதுக்குப் பின்னாடி தாயும் மகனும் பாத்தி கட்டி நெல்லை விதைச்சாங்களாம். அந்த நெல்விதை ரொம்ப அதிகமா வளர்ந்து நாத்தாயிடுச்சா. இதப் பார்த்த தேவேந்திரன் அம்மா இத்தன நாத்துக்கள நானா வயலில நடமுடியாது என்று சொன்னானா!

உடனே பார்வதி தெய்வலோகக் கன்னிக உனக்கு வந்து நாத்து நட்டு தருவார்கள். அந்த நாத்து நடற பொண்ணு மேல நீ சேத்த அல்லி போட்டேனா அவங்க தங்கிருவாங்க. இந்த யோசன ஏ சொல்லுறானா மகனுக்கு கல்யாண பண்ணி வச்சரலானு நினைக்கிறா.

அதைப் போலவே அவனும் சேத்தை அள்ளி வீசுகிறான். அந்தச்

சேறு இரண்டு பொண்ணுக மேல விழுந்து அந்த ரெண்டு பொண்ணும் இங்கேயே தங்கிக் கொள்கிறார்கள். அவன் அந்தப் பெண்கள் மீது ஆசைப்பட்டு திருமணம் செய்து கொள்கிறான்.

ரெங்கசாமி (76)
தேவேந்திர குல வேளாளர்,
புலியகுளம், கோயமுத்தூர்

**7 செங்கோட்டுப் பள்ளு கூறும் தேவேந்திரர் தோற்றக்கதை**

பக் - 203 - 208

செங்கோட்டுப் பள்ளு நூலில் தேவேந்திர குல முதல்வன் மூவேந்தர் வேண்டுகோளில் மேலோகம் சென்று நெற்பயிரைக் கொண்டு பூமியில் நடவு செய்வதாகக் கூறுகிறது.

**8.** தேவேந்திரனுக்கும் நீர் நிலையில் உள்ள தாமரையில் உறையும் திருமகளுக்கும் பிறந்த குழந்தையின் வழியினரே தேவேந்திரர்கள் ஆவர். ப - 12

தொகுப்பு : சண்முகபாரதி
ஆதாரம் : இம்மானுவேல் தேவேந்திரர்
கதைப்பாடல் ஆய்வு

**9.** மேலோகத்தில் இந்திரனும், இந்திராணியும் தன் குழந்தையை விளையாட விட்டுவிட்டு வெத்தலை போட்டு அங்கனக்குள்ள எச்சி துப்பி வச்சுட்டாங்களா! இதைப் பார்த்த தேவேந்திரன் எச்சிலிலே வயல் போன்று தொளிக் கலக்கி விவசாயம் செய்ய ஆரம்பித்து விட்டானாம். இப்படிக் கருவிலே விவசாயம் செய்யக் கற்றுக் கொண்டதால், அந்த இந்திரன் மகனுக்கு தேவேந்திர குல வேளாளன்னு பட்டம் வந்துச்சாமா! அப்புறம் மொதமொதல்ல பூமியில விதை கொண்டு வந்து விதைச்சதுனால இந்த மண்ணுக்குச் சொந்தக்காரன் ஆவான்.

கக்கன் (66)
தேவேந்திர குல வேளாளர்.
கே. குறும்பபட்டி, திண்டுக்கல் மாவட்டம்



**10 பள்ளர் தோற்றம்**

ஒரு காலத்தில், கடவுளுக்கு அரசனான தேவேந்திரன் நீரில் வளர்ந்திருந்த செடி ஒன்றில் விழுந்து விட்டதாகவும் உடனே அதிலிருந்து ஒரு குழந்தை உற்பத்தியானதாகவும் அந்தக் குழந்தையே பள்ளர்களுக்கு ஆதி மூதாதை ஆகும்.